கோ. ஆப்டெக்ஸ் சின்னத்தில்
கோடி கோடி
வண்ணங்கள்









கோ-ஆப்டெக்ஸ் மெட்ரூஸ் ஹேண்டுலூம்ஸ்

02-60, லக்கி பிலாஸா சாப்பிங் செண்டர் 304, ஆர்சர் ரோடு, சிங்கப்பூர் 0923

DIPR/444/83/ELEGANT



**சவால் விடுகிறார் வேலூர் நாராயணன்**

வீட்டு வசதி வாரியத்தின் கடந்த ஐந்து ஆண்டு கால நிர்வாகத்தைப்பற்றி விசாரிப்பதற்கு அரசுஏற்பாடு செய்திருப்பதை வரவேற்கிறார் — 22 மாதங்கள் அதன் தலைவராயிருந்து பணியாற்றிய திரு வேலூர் நாராயணன்.

# சின்னச் சின்ன செய்திகள்

வீட்டு வசதி வாரியத்தின் சட்ட திட்டங்களை அநுசரித்தே பணிகள் நடத்தப்பட்டிருக்கின்றனவா என்று அறிவதற்காக மட்டுமே இந்த விசாரணைக்கு ஏற்பாடு செய்திருப்பதாக அறிகிறேன்.

பத்திரிகைகளில் இந்த விசாரணை குறித்துத் தவறான செய்திகள் வந்ததற்காக வருந்துகிறேன். இந்தத் தவறான செய்திகளைப் பத்திரிகைகளுக்குக் கொடுத்தது வாரிய அதிகாரி ஒருவருடைய விஷமமாகத்தான் இருக்க வேண்டும். அந்த அதிகாரி என்னை அசிங்கப்படுத்துவதாக நினைத்துக் கொண்டு, வாரியத்தையே அசிங்கப்படுத்தி விட்டார். மன்னிக்க முடியாத குற்றம்.

விசாரணை செய்யும் அதிகாரி என் பதவிக் காலத்தில் ஏதேனும் தவறுகள் நிகழ்ந்திருப்பதாகச் சுட்டிக் காட்டி, அதற்கு நான்தான் காரணம் என்று கண்டு பிடிக்கிற பட்சத்தில், அதற்கு முழுப் பொறுப்பையும் ஏற்க நான் தயாராக இருக்கிறேன்.

வீட்டு வசதி வாரியத்தில் யாருக்கேனும் ஏதாவது காரியத்தை நான் செய்துகொடுத்து அதற்காக லஞ்சம் பெற்றேன் என்று தமிழ் நாட்டின் எந்தப் பகுதியிலிருந்தாவது எவரேனும் குற்றம் சாட்டி நிரூபித்துவிட்டால், அதற்கான தண்டனை எதுவாக இருந்தாலும் ஏற்கத் தயார்!

இதை நான் சம்பந்தப்பட்ட ஒவ்வொருவருக்கும் ஒரு சவாலாகவே விடுக்கிறேன்.

## தொழிலகத்தில் கொலு

அக்டோபர் முதல் வாரத்தில் நான்கு நாட்களுக்கு இயந்திரங்களின் ஓசைக்குப் பதில் இசையும், மலரும் சந்தனமும் வழங்கிக் கோலாகல வரவேற்புக் கூடமாகக் காட்சியளித்தது சென்னை பாடியில் உள்ள லூகாஸ்-டி. வி.எஸ். தொழிற்சாலை.

பாதுகாப்பு வாரம், விளையாட்டு நாள், ஸ்தாபகர் தினம், நாடக விழா நாள், கண் பாதுகாப்பு காம்ப்— என்று மாதா மாதம் ஒரு நிகழ்ச்சியை ஓசைப்படாமல் நடத்தும் இவர்களது தொழிலாளர் நல இலாகா, அக்டோபருக்குப் புதுமையாக ஒரு நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்தது.

தொழிற்சாலையிலேயே பெண் தொழிலாளர்கள் கொலு வைத்து, தம் சக தொழிலாளர்களின் குடும்பங்களை வரவேற்று நான்கு நாட்கள் கொண்டாடினர்.

காதி கிராமோத்யோக் பவன் பொம்மைகளைக் கொடுத்து உதவியதோடு விற்பனையும் செய்தது. — பொம்மையோடு நின்றால் போதாது என்று வீட்டு உபயோகத்துக்கான பொருள்களையும், வகை வகையானதுணிமணிகளையும் ஒரே கூடத்தில் விற்பனைக்காக வைத்திருந்தார்கள். தொழிலாளர்களைக் கடை கடையாக அலைய விடாமல், கடைகளையே

○ லூகாஸ் - டி. வி. எஸ். கொலு



தொழிலாளரிடம் கொண்டு வந்த பெருமை இந்த இரண்டு நிர்வாகங்களையும் சேரும். புதுமையான நிகழ்ச்சி மட்டுமல்ல; பிற தொழிற்சாலைகளும் பின்பற்றக் கூடிய, கதர் — கிராமத் தொழில்களுக்கு ஊக்கம் அளிக்கக் கூடிய விவேகமான முயற்சி.

## கேசரிப் பருப்பும் மோசடி வேலையும்

சில வருடங்களுக்கு முன்பு, கேசரி தால் அல்லது கேசரிப் பருப்பு என்று சொல்லப் படும் தானியம் மத்தியப் பிரதேசத்தில் ரேவா, சாத்னு ஆகிய இடங்களில் பயிர் செய்யப்பட்டு, அங்கேயும் அக்கம் பக்கத்துக் கிராமங்களிலும் உள்ளவர்கள் உபயோகித்த தில், முடக்கு வாதம் மாதிரி வந்து, கால்கள் இரண்டும் பாதிக்கப்பட்டு அவதிப்பட்டனர் என்பது பழைய செய்தி. ஆனால் சமீபத்தில் இந்துஸ்தான் டைம்ஸ் நிருபர் அதிர்ச்சி தரும் ஒரு தகவலை இம்மாதம் மூன்றும் தேதி வெளியிட்டிருக்கிறார்:

இந்தக் கேசரிப் பருப்பு இப்போது தென் இந்தியாவுக்குக் குறிப்பாகத் தமிழ் நாடு கர்நாடகம், ஆந்திரம் ஆகிய மாநிலங் களுக்கு அனுப்பப் படுகிறதாம்! கடலைப் பருப்பு அல்லது துவரம் பருப்புடன் இந்தத் தானியத்தைக் கலந்து விற்பதற்கும் இது உபயோகப்படுத்தப் படுகிறதாம்!

இந்தப் பயங்கரமான தகவல் உண்மை யான செய்திதானா என்று விசாரித்தறிய, சென்னை மாநில தானிய வியாபாரிகள் சங்கத்தின் தலைவர் திரு டி. வி. கிருஷ்ண ராவ் அவர்களை அணுகிக் கேட்டபோது, கிடைத்த பதில்:

''மத்தியப் பிரதேசத்திலேயே இந்தக் கேசரிப் பருப்பு உற்பத்தி குறைந்து வருகிறது. அவர்களுக்கு இங்கே அனுப்பக் கூடிய அள வுக்கு உற்பத்தியே கிடையாது. அதுமட்டு மல்லாமல், தமிழ்நாடு, ஆந்திரா, கர் நாடகத் தலைநகரங்களில் உள்ள நகராட்சிகள் இதைத் தங்கள் மாநிலங்களில் இறக்குமதி செய்யவே தடை விதித்திருக்கின்றன.

மேற்கு வங்கத்தில் மட்டும்தான் இது தடை செய்யப்படவில்லை. அங்கே மட்டும் தான் இந்தத் தானியம் அனுப்பப் படுகிறது. இந்தப் பகுதிக்கு நிச்சயம் வராது.

கடலைப் பருப்புதான் இருக்கிற தானியங் களிலேயே மிகக் குறைந்த விலையுள்ளது. அப்படி இருக்க அதில் போய் யாரேனும் கலப்படம் செய்வார்களா?

அப்படியே இங்கே இறக்குமதி செய்தால் அதிகாரிகள் மிகக் கடுமையான நடவடிக்கை எடுப்பார்கள். அதனால் இங்கே தமிழ் நாட்டில் கேசரிப் பருப்பு விற்பனையிலோ— கலப்படத்திலோ வரும் என்று யாரும் பீதி யடைய வேண்டாம்!''

-சாருகேசி

○ டி. வி. கிருஷ்ணராவ்





○ பட்டுக்கோட்டை பிரபாகர்

## ஆஸ்திக — நாஸ்திக பாலம்!

மண மேடையின் ஒரு பக்கம் பெரியார் படங்கள். அவற்றுக்கு மாலை மரியாதைகள். இன்னொரு புறம் வேங்கடாசலபதி அலர் மேலு மங்கைத் தாயார் படங்கள். அவற் றுக்குத் தீபாராதனைகள். நடுவே மணமக்கள் சம்பிரதாய மரபுகள் மாறாது சாஸ்திரப்படி திருமணம் செய்துகொண்டனர். தொடர்ந்து பகுத்தறிவுவாதிகள் வழக்கப்படி வாழ்த்து மேடை!

இப்படி விநோதமான முறையில் பகுத் தறிவுப் பாசறைக்கும் ஆத்திக எண்ணங் களுக்கும் பாலம் அமைத்தது போல் நடந் தேறியது. இளம் தலைமுறை எழுத்தாளர் பட்டுக்கோட்டை பிரபாகர் திருமணம், திருச்சியிலே. மணமகன் சாந்தியின் தகப் பனார் திரு முத்து நாராயணன் பெரியாரின் பரம பக்தர்.



காட்பரிஸ்
சாக்லேட்டுகள்









## 5 ஸ்டார் கையில் இருக்கையிலே...
## உங்கள் காரியம் கைகூடிடுமே

நடக்கையிலே, பேசிச் சிரிக்கையிலே, மகிழ்ச்சியிலே
திளைக்கையிலே, சிறிது பசிக்கையிலே சாப்பிடுங்கள்
5 ஸ்டார், வழங்கிடுங்கள் 5 ஸ்டார்.,

சுவைமிக்க சாக்கலேட் பார்— வாயிலே நீரூறும்.

சுவை நலம் தரும் 5 ஸ்டார்.

வார்த்தைகளால் சொல்ல முடியாததை
நேர்த்தியாகச் சொல்வது.

OBM/1845/TM

**நாகபுரி டெஸ்ட்:**

# பாயும் புலி பதுங்கியது ஏன்?



○ ரவி சாஸ்திரி

**நா**கபுரியில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் ஆடப்பட்ட மூன்றாவது டெஸ்ட் உட்பட மூன்று மாட்சுகளும் டிரா ஆனது இரு காப்டன்களுக்கும் மகிழ்ச்சியை அளித்திருக்கும். 'உலகக் கோப்பை வெற்றியின் மூலம் கிடைத்த புகழ் மங்காமல் தப்பினேன்' என்று கபில்தேவ் நிம்மதிப் பெருமூச்சு விடலாம். 'பாகிஸ்தான் சென்ற முறை இந்தியாவுடன் ஆடிப் பெற்ற வெற்றி இப்போது தோல்வியாக மாறிவிடவில்லை' என்ற அளவில் ஜாகீர் அப்பாஸும் திருப்தி அடையலாம். ஆனால் கிரிக்கெட் ரசிகர்களுக்கு மூன்று மாட்சுகளுமே பெரிய ஏமாற்றமாக முடிந்தன. 'டல்லடித்தது; போரடித்தது' என்றால் அதற்கு மழையை முழுக்க முழுக்கக் காரணம் காட்டிவிட முடியாது. காப்டன்கள் இருவருமே ஆக்கப்பூர்வமாகச் செயல்படவில்லை.

ரிஸ்க் எடுத்துக் கொள்ளாமல் ஜாகீர் அப்பாஸ் ஆட நினைத்ததை ஓரளவு புரிந்து கொள்ளலாம். அவர் புதிதாகக் காப்டன் பதவி ஏற்றுள்ளார். அவருடைய டீம் சென்ற முறை வந்தது போன்ற பலமான குழு அல்ல. அவர் தோற்றிருந்தால் பாக் அணியின் புகழை மட்டுமின்றித் தமது காப்டன் பதவியையும் கூட இழந்திருக்கக் கூடும்.

ஆனால் கபில்தேவும், அவரது டீமும் உலகக் கோப்பை வெற்றிக்குப் பிறகு அனைவர் மதிப்பிலும் மிக உயர்ந்திருப்பதால் அவர் தைரியமாக ஆடியிருக்கலாம். போதாக்குறைக்கு டெஸ்ட்டுகளுக்கிடையே நடந்த ஒரு நாள் சர்வதேசப் போட்டிகளில் அவர் வெற்றி பெற்றிருந்தார். அதுவும் அவரைத் துணிந்து செயல்பட ஊக்குவித்திருக்க வேண்டும். எனவே கபில் பாயாமல் பதுங்கியதானது வியப்புத்தான். இந்த விதமாகப் பார்த்தால் ஜாகீர் அப்பாஸ் கபிலை வென்றுவிட்டார் என்றுகூடச் சொல்லலாம்,

இந்திய டீமைத் தேர்ந்தெடுத்த விதத்திலும் கபிலும் சரி, தேர்வாளர்களும் சரி நமது மதிப்பைப் பெறவில்லை. முதல் இரு டெஸ்ட்களுக்கு கபில், மதன்லால் ஆகியோரின் வேகப் பந்து வீச்சுக்குப் பக்கபலமாக ஸ்பின்னர்களைத் தேர்ந்தெடுப்பதில் இளைஞர்களுக்கு முக்கியத்துவம் தராமல், ஆற்றல் குறைந்துவரும் பழம்பெரும் ஆட்டக்காரர்களை அமைத்தனர். தங்கள் தவறை உணர்ந்து அவர்கள் திருத்திக் கொள்வதற்குள் காலம் கடந்து விட்டது. மூன்றில் இரு டெஸ்ட்கள் ஆடப்பட்டு விட்டன. கடைசி டெஸ்ட்டில் கையாளப்பட்ட கொள்கை ஆரம்பத்திலேயே அமுலுக்கு வந்திருக்க வேண்டும்.

மழை காரணமாக மிகவும் பாதிக்கப்பட்ட நாகபுரி டெஸ்ட்டில் சிறிதளவேனும் ஆர்வம் நமக்கிருந்ததென்றால் அதற்குக் காரணமாக கவாஸ்கரின் நேர்த்தியான ஆட்டம் (50, 64) ஜாகீர் அப்பாஸின் 85, மியான்தாத்தின் 60 ஆகியவற்றைக் குறிப்பிடலாம். ரவி சாஸ்திரி 75 ரன்கள் தந்து ஐந்து விக்கெட்டுகளை எடுத்ததன் மூலம் தமது முந்தைய டெஸ்ட் ரிகார்டைக் கடந்தார். கடைசி நாளன்று வாஸிம் ராஜாவின் லெக் பிரேக்குகள் மாட்சுக்கு ஓரளவேனும் உயிரூட்டின.

இனி லாயிடைச் சந்திக்கப் போகிறார் கபில். 'உலகக் கோப்பையை இழந்தது ஒரு விபத்து போன்றதே' என்று நிரூபிக்கத் துடியாய் இருப்பார் லாயிட். எனவே இந்தச் சந்தர்ப்பத்தில் இந்திய காப்டனும் அவரது அணியினரும் நமது மதிப்பிலே மேலும் உயர ஏற்ற விதமாக நடந்து கொள்வார்கள் என்று எதிர்பார்ப்புடன் பிரார்த்திக்கவும் செய்கிறோம்.

-பி. என். சுந்தரேசன்
தமிழ் வடிவம்: குட்டி கிருஷ்ணன்
படங்கள்: பாலாஜி

○ ஜாகீர் அப்பாஸ்



கல்கி ஆசிரியர்

**கி.ராஜேந்திரன்**

சரித்திரத் தொடர் கதை

# அபிராமவல்லி

**கல்கி**

நவம்பர் 6

தீபாவளி

சிறப்பிதழில்

ஆரம்பம்


அகாலி தளம்
வன்முறையாளர்
ஜனாதிபதி ஆட்சி
சேத்தி


இதெல்லாம் எதுக்கு?.. எல்லாருமா சேர்ந்து என் பதவி நாற்காலியை பறிக்கத் தான் சதி பண்றீங்கன்னு தெரியுதே!
மத்திய-மாநில அரசுகள் உறவில் திருத்தங்கள்


நூலுடைய நுனி என் கையிலே நான் சிக்கி இருக்கு!
தொண்டைமான்
இலங்கைச் சிக்கல்



# கல்கி



1983 அக்டோபர் 23

ருத்ரோத்காரி ஐப்பசி 6

மலர் : 42 இதழ் : 12

## மார்க்கம் இருந்தும் மனமில்லையே!

தொழிலதிபராக இருந்தபோதிலும் நாட்டுநலனில் அக்கறைகொண்டு அச்சமின்றித் தமது கருத்துக்களை அவ்வப்போது வெளியிடும் ஒருசிலரில் முக்கியமானவர் பொள்ளாச்சி திரு. நா. மகாலிங்கம். ஆண்டுதோறும் வள்ளலார் — காந்தி விழாவை விமரிசையாக நடத்தும் அவர் வாய்ச்சொல் வீரராக மட்டுமின்றி வாழ்ந்து காட்டுகிறவர். சிந்தனையாளரான அவரது கருத்துக்கள் புதுமைப் பொலிவுடனும் சத்திய ஒளியுடனும் பிரகாசிக்கும். காந்தி ஜெயந்தியையொட்டி அவர் எழுதியுள்ள ஒரு கட்டுரை (ஓம்சக்தி அக்டோபர் மாத இதழ்) நம் கவனத்தைக் கவர்கிறது. ''காந்தியடிகள் உயிரோடு இருந்த காலத்தில் நமது ராணுவச் செலவு 50 கோடி ரூபாய்தான். அது படிப்படியாக 250 கோடி, 800 கோடி என்று அதிகரித்து இப்போது 5000 கோடியைத் தொட்டுவிட்டது!'' என்பதை எடுத்துக் காட்டுகிறார் நா. மகாலிங்கம்.

உலக யுத்தத்தின்போது தரைமட்டமான ஜப்பானும் ஜெர்மனியும் இன்று பொருளாதார சுபிட்சத்தில் உலக நாடுகளிடையே முன்னணியில் நிற்கின்றன என்றால் அதற்குக் காரணங்கள் இரண்டு. முதலாவது ராணுவச் செலவினம் கிடையாது. அதை அமெரிக்காவும் இதர நேசநாடுகளும் கவனித்துக்கொள்கின்றன. மற்றது, 'கட்டுப்பாடுகள் அற்ற சுதந்திரப் பொருளாதாரம்; தனியார் துறைக்கு ஊக்கம்' என்ற கொள்கை.

நமது கூட்டுச்சேரா கொள்கை மேற்கத்திய நாடுகளுடன் ராணுவ உடன்படிக்கை செய்துகொள்ள அனுமதிக்கவில்லை என்றாலும் அண்டைநாடுகளுடன் நட்புறவை வளர்த்துக் கொள்வதில் போதிய அளவு சாணக்கியம் காட்டாததால்தான் அரசாங்க வருவாயில் மிகப் பெரும் பகுதியை ராணுவச் செலவினங்களே விழுங்கிவிடுகின்றன. சுதந்திரம் பெற்று 36 ஆண்டுகள் ஆகியும் உற்பத்தியை அதிகரிக்க அடிப்படைத்தேவைகள் கூடப் பூர்த்தி செய்யப்படவில்லை. போதாக்குறைக்கு பர்மிட் — லைசென்ஸ் — கோட்டா கட்டுப்பாடுகள் வேறு.

''உலக சமாதானத்துக்காக வெள்ளைப் புறாக்களைப் பறக்கவிடும் பாரத நாடு அண்டை நாடுகளோடு எல்லைச் சண்டைகளில் சிக்கிக் கிடப்பது துளிக்கூட நியாயமல்ல, காந்திய வழியுமல்ல'' என்கிறார் நா. மகாலிங்கம். அடுத்து, ''மதுவிலக்கு இங்கே தோல்வி கண்டிருக்கலாம். ஆனால் அது மதுவிலக்கின் தோல்வியல்ல'' என்கிறார். மது வியாபாரத்தில் ஏழைகள் எப்படி கொள்ளையடிக்கப்படுகிறார்கள் என்பதை விளக்குகிறார்:—

''வெளிநாட்டில் 750 மில்லி மது 7 ரூபாய். அதில் கிடைக்கும் லாபமே 4 ரூபாய் என்கிறார்கள். இங்கே அதே அளவு மதுவின் விலை 25 ரூபாய்! அதன் உண்மையான அடக்கவிலை ரூ. 1.50. புட்டியின் விலை 1 ரூபாயைச் சேர்த்தால் கூட மொத்தம் ரூ. 2.50 தான். இதை 25 ரூபாய்க்கு விற்பது என்றால் அது கொள்ளைதானே? 1000 சதம் அதிக விலையா? என்ன அக்கிரமம் இது? வெளிநாட்டிலிருந்து இறக்குமதியாகும் கார் மீது கூட 320 சதம்தான் வரி போடுகிறார்கள்!''

மனிதனுடைய பலவீனங்களைப் பயன்படுத்தி அரசாங்கமே லாட்டரி நடத்துவதும் மது வியாபாரம் செய்வதும் ஏழைகளின் பணத்தையெல்லாம் சுரண்டுவதும் எப்பேர்ப்பட்ட அநீதிகள்! இந்த லட்சணத்தில் காந்தி ஜெயந்தியைத் தமிழக அரசு கொண்டாடுகிறது. அதில் கலந்து கொள்ளும் முதல்வரோ மதுவிலக்கை அமல்படுத்த மனமிருந்தும் மார்க்கம் இல்லையே என்று நீலிக் கண்ணீர் வடிக்கிறார்.

வெட்கக்கேடு!

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# போட்டிக்கதை: 8

"ஏண்டா, வந்து சோற்றைக் கொட்டிண்டு போயேன். ஒவ்வொரு தடவையும் வெற்றிலே பாக்கு வைத்து அழைக்கணுமா?''

ஒவ்வொரு தடவையும் சாப்பிடும்போது ரவியின் சிற்றன்னை பாடும் பல்லவி இது. (ராகம்: ருத்ரம்; தாளம்: ஆவேசம்) அடிக்கடி கேட்டு மரத்துப் பின்பு உறைத்துப் போன ரவி நிதானமாக வந்து தட்டின் முன் அமர்ந்தான். தட்டில் என்ன இருக்கிறது, தான் என்ன உண்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் இருந்ததை அள்ளிப் போட்டுக் கொண்டு இரண்டே நிமிடத்தில் இடத்தை விட்டு எழுந்து விட்டான். எழுந்து செல்லும் மகனை வேதனையோடு பார்த்தார் நாச்சாமி.

கடந்த மூன்று வருடங்களாக ரவிக்கு நடைபெறும் நித்திய மண்டகப்படியைப் பார்த்து வேதனையால் வெம்பிப் போய்விட்டார். வேதனையும், விசாரமும் படுவதைத்தவிரவேறு ஒன்றும் செய்ய முடியாது. ரவிக்கு ஒன்றரை வயது ஆகும்போதே அவன் அன்னை திடீரென்று வந்த ஃபுளு காய்ச்சலில் அவசர அவசரமாக மேலே சென்று விட்டாள். நாச்சாமிக்கு உறவு என்று சொல்லிக்கொள்ள யாரும் கிடையாது. எனவே, தனக்காக இல்லாவிட்டாலும் குழந்தை ரவியைக் கவனிப்பதற்காகவாவது ஒரு துணையைத் தேடிக் கொள்ள வேண்டிய அவசியமாகி விட்டது. தெரிந்தோ, தெரியாமலோ, புரிந்தோ புரியாமலோ அலமேலுவை இரண்டாந் தாரமாக மணந்த பிறகு நாச்சாமிக்கு இருந்த கொஞ்ச நஞ்ச உரிமைகளும் பறிபோய் விட்டன. விட்டுக் கொடுத்து, விட்டுக் கொடுத்துக் கடைசியில் எதையுமே தட்டிக் கேட்க முடியாத அளவுக்கு வந்துவிட்டது.

ரவி, மூத்தவளின் பிள்ளை என்ற ஒரு காரணமே அலமேலுவுக்குப் போதுமானதாக இருந்தது. திருமணமான புதிதில் ரவியைச் சொந்தப் பிள்ளை போல்தான் வளர்த்தாள். ஆனால் சுற்றியிருந்தவர்களின் போதனையால் மனம் விகாரப்பட்டு ரவியைக் கொஞ்சுவதை நிறுத்தி விட்டாள். தாய்க்கும் சிற்றன்னைக்கும் வேறுபாடு காண முடியாத அந்தச் சின்ன வயதில் அலமேலுவின் செய்கைகள் ரவியை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. ஆனால் வயதாக ஆக, சித்தியின் நடவடிக்கைகள் புரிய ஆரம்பித்ததும், ரவி தாயன்புக்காக ஏங்க ஆரம்பித்தான். அது தனக்குக் கிடைக்காது என்று தெரிந்த பின்பு தன்னையே அவன் தனிமைப்படுத்திக் கொள்ளத் துணிந்தான்.

படிப்பு முடிந்து, பட்டமும் வாங்கிய பின் மேலும் சோதனைகள் அதிகமாயின. ஒரு வேலையைத் தேடிக் கொண்டால் தன் பாட்



டுக்கு நிம்மதியாக இருக்கலாம்: சித்திகூட மனம் மாறலாம் என்று நினைத்த ரவிக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. விண்ணப்பம் செய்தவுடன் எங்கே வேலை கிடைக்கிறது? பல அலுவலகங்களில் ஏறி,இறங்கிக் கால்கள் வலி எடுத்ததுதான் மிச்சம். ரவியின் கையாலாகாத்தனத்தை அவமேது கட்டிக் காட்டத் தயங்க மாட்டாள்.

''பணம் என்ன கொட்டியா கிடக்கிறது?'' ''இந்தத் தரித்திர மூஞ்சிக்கு எவன் வேலை கொடுப்பான்?'' ''ஒவ்வொருத்தன் எவ்வளவு சாமர்த்தியமாய் மூட்டை தூக்கி, அதைச் செய்து, இதைச் செய்து பிழைக்கிறான்....''

**''என்ன** நாச்சாமி, சாப்பாடு கூடச் சாப்பிடாமல் அப்படி என்ன பலத்த யோசனை?'' என்று கேட்ட சாரதியைப் பார்த்தார் நாச்சாமி. நாச்சாமியும் சாரதியும் சம வயதுக்காரர்கள். அந்த அலுவலகத்தில் ஒன்றாக வேலைக்குச் சேர்ந்து ஒன்றாகப் பழகி வருபவர்கள். மதிய உணவு இடைவேளையின்போது ஒருவருடன் ஒருவர் மனம் விட்டுப் பேசிக் கொள்வது வழக்கம்.

''என்ன சொல்ல? வர வர வாழ்க்கை மிகவும் வெறுத்துப் போய் விட்டது. பின்ளையாண்டானுக்கு இன்னும் வேலை கிடைத்தபாடில்லை. அவனைப் பார்ப்பதற்கு வேதனையாக இருக்கிறது.''

சாரதிக்கும் இந்தப் பிரச்னைதான். அவரது மகனுக்கும் இன்னும் வேலை கிடைத்தபாடில்லை. இருந்தாலும் நாச்சாமி அளவுக்கு அவர் வாழ்க்கை வேதனையாக இல்லை.

''இப்படிக் கவலைப்படுவதால் மட்டும் வேலை கிடைத்து விடுமா? இருந்தாலும் உன் நிலைமை எனக்குப் புரிகிறது. ஏன்? கடவுளுக்குக் கூடப் புரிகிறது. ஆனால் நமது அரசாங்கத்துக்குத்தான் புரிய மாட்டேங்கிறது...''—சாரதி புலம்பித் தீர்த்தார்.

பிற்பகலில் அலுவலகம் இரண்டுபட்டுக் கொண்டிருந்தது. ஊழியர்கள் அனைவரும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருந்தார்கள். காலையில் நடந்த 'போர்டு மீட்டிங்'கில் எடுக்கப்பட்ட முடிவுகள்தான் காரணம். முக்கியமானவைகளில் சில:

(1) வருடத்திற்குக் குறைந்த பட்சம் எட்டு சதமும் அதிகபட்சம் பத்து சதமும் போனஸ் கொடுக்கப்படும்.

(2) ஐந்து வருடத்துக்கு மேல் வேலை செய்தவர்கள் நிரந்தரம் ஆக்கப்படுவார்கள்.

(3) பதவியில் இருக்கும்போது ஊழியர் ஒருவர் இறக்க நேரிட்டால் அன்னார் குடும்பத்துக்கு ரூ. 10,000 கொடுக்கப்படும். மேலும் தகுதியுள்ள அவரது வாரிசுக்கு (மகனோ மகளோ) வேலை கொடுக்கப்படும்.

''என்ன நாச்சாமி, தீர்மானங்களைப் பார்த்தாயா? நமக்கெல்லாம் இப்போதுதான் நல்ல காலம் வந்திருக்கிறது.''

''ஆமாம், ஆமாம். எனக்குக் கூட மிக்க மகிழ்ச்சிதான்.''



# வேறு வழியே இல்லையா?

'சந்துரு'

அன்று காலையிலிருந்தே வீடு அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது. வங்கி வேலைக்கு மனுப் போட்ட ரவி பணம் கேட்டவுடன் அலமேலு வழக்கம் போல் குதிக்க ஆரம்பித்தாள். போன வருடம் இதே வங்கிக்கு நாற்பது ரூபாய் பணம் கட்டித் தேர்வும் எழுதிவிட்டு வந்தான். ஆனால் இதுவரைக்கும் எந்தத் தகவலும் இல்லை. மறுபடியும் எதற்காக நாற்பது ரூபாய் தண்டம் அழ வேண்டும் என்று அலமேலு குதித்தாள்.

காலையில் ஒரு விதமாக வீடு அமாககளப் பட்டது என்றால் மாலையில் வேறு விதமாக அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. மருத்துவமனையிலிருந்து அப்போதுதான் நாச்சாமி சடலத்தைக் கொண்டு வந்து தடுக் கூடத்தில் போட்டிருந்தார்கள். அலுவலகத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த நாச்சாமியின் மேல் பேருந்து ஒன்று இடிக்க நடைபாதையின் மேல் விழுந்து விட்டார். விழுந்த வேகத்தில் மின் விளக்குக் கம்பத்தில் தலைமோதிப் பலத்த அடிபட்டது. ஏராளமான இரத்த சேதம். அந்த இடத்திலேயே நாச்சாமி இறந்து விட்டார். காவல் துறை விசாரணை, பிரேதப் பரிசோதனை எல்லாம் முடிந்து உடலை வீட்டுக்குக் கொண்டு வரும்போது இரவு மணி எட்டாகி விட்டது. சடலத்தின் தலைமாட்டில் அமர்ந்துகொண்டு ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள் அலமேலு. தனக்கு இருந்த ஒரே பிடிப்பும் போய்விட்ட அதிர்ச்சியில் அழக்கூடத் தோன்றாமல் அமர்ந்திருந்தான் ரவி. நாச்சாமியின் நண்பர் சாரதிதான் கூட மாட இருந்து செய்ய வேண்டிய காரியங்களை யெல்லாம் செய்து கொண்டிருந்தார். நண்பரின் சாவு ஏகப்பட்டசோகத்தைக்கொடுத்திருந்தபோதிலும் நிதானம் இழக்காமல் இருந்தார்.

காரியத்தை எல்லாம் முடித்து விட்டு மாலை வீட்டுக்கு வந்தவரிடம் தபால் கவரை நீட்டினாள் சாரதியின் மனைவி. உறையின் மேல் 'ரகசியம்' என்று போடப்பட்டிருந்ததால் சாரதியின் மனைவி உறையைப் பிரிக்கவில்லை. உறையைப் பிரித்துக் கடிதத்தைப் பார்த்தார் சாரதி. அவருக்கு ஒரே அதிர்ச்சி. ஏனெனில் நாச்சாமிதான் கடிதம் எழுதி இருந்தார்.

''அன்புள்ள சாரதிக்கு:

இந்தக் கடிதத்தை நீ படிக்கும்போது நான் சாம்பலாகி யிருப்பேன். ஆம்! தற்கொலை செய்து கொள்வது என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

நேற்று அலுவலகத்தில் போட்ட தீர்மானத்தின் விளக்கத்தைக் கேட்டேன். பதவியில் இருக்கும்போது ஒருவர் இறந்தால்தான் அவரது வாரிசுக்கு வேலை கொடுப்பார்களாம். ஆனால் இயற்கையாக ஓய்வு பெறுபவர்களுக்கு இந்தச் சலுகை கிடையாதாம். இன்னும் இரண்டு வருடங்களில் நான் ஓய்வு பெற்றாக வேண்டும். இந்த இரண்டு வருடத்தில் ரவிக்கு வேலை கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்? இரண்டு வருடங்களுக்குப் பிறகு இரண்டு பேரும் அல்லவோ வேலையில்லாமல் இருக்க வேண்டும்? யோசித்துப் பார்த்ததும் ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர முடிந்தது. ஆம், நான் இறந்துவிட்டால் என் வேலை ரவிக்குக்கிடைக்கும். இந்த இள வயதில் வாழ்க்கையில் பிடிப்பு ஏற்பட அந்த வேலை முக்கியம். தற்கொலை என்று தெரிந்தால் என் பேரில் உள்ள ஆயுள் பாதுகாப்புப் பணம் கிடைக்காமல் போனாலும் போய்விடும். ஆகவே தற்செயலாக ஏற்பட்ட மரணம் என்று நம்பும் விதமாக ஒன்றைச் செய்யப் போகிறேன். தயவுசெய்து இதை யாரிடமும் சொல்ல வேண்டாம். என் சார்பாக ரவிக்கு வேலை வாங்கித் தர வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன். என் செய்கையை மன்னித்து மறந்துவிடு. எனக்கு வேறு வழியே இல்லை.

இப்படிக்கு

நண்பன் நாச்சாமி''

இதுவரை அழாதிருந்த சாரதி இப்போது குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்துவிட்டார். தம் மகனின் 'வேலைக்காகத் தம் உயிரையே கொடுத்த நாச்சாமியின் பரிதாபத்தை நினைத்து அழுதாரா, இல்லை, தமக்கும் ஒரு மகன் இருக்கிறான், அதுவும் வேலை இல்லாமல் இருக்கிறான். அவனுக்காகத் தாமும் இந்த முடிவை எடுக்க நேரிடுமோ என்று அஞ்சி அழுதாரா?

# டெபாசிட்தாரர்களுக்கு

# 24%

## வட்டி வழங்கப்படுகிறது

மேற்படி கூடுதல் வட்டி 31-12-83 க்குள் டெபாசிட் செய்யும்
பென்ஷனர், மகளிர், மைனர்களுக்கு
**V.I.P. BRIEF CASE"** அன்பளிப்புடன் வழங்கப்படும்.

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள்
ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

91, உஸ்மான் ரோடு,
(சிவா விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017. போன் : 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன்: 24795

தஞ்சாவூர் : எண்: 2 & 3, முதல் மாடி, சி. எ. கனல் ரோடு,
தஞ்சாவூர் போன்: 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601
போன்: 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன்: 453




"பெண் பார்க்க வந்தப்போ என் ஹஸ்பண்ட் போட்ட ஒரே 'கண்டிஷன்' என்ன தெரியுமா! அவரோடு வெளியே போறச்சே மட்டும்தான் நான் ராகமாலிகா புடவையை கட்டிக்கணுமாம்."

**ராகமாலிகா சேலைகள்**
சுகன் ஆர்கேட்
நெ. 12 நாகேஸ்வரராவ் ரோடு
பனகல் பார்க் அருகில்
தி. நகர், சென்னை-600 017
(ஞாயிறு கடை உண்டு)

# உபவாசம் என்றால் என்ன?

உபவாசத்தின் நோக்கம் மனதைக் கட்டுப்படுத்தி ஒரு நிலைப்படுத்துவதுதான் உப – சமீபத்தில் வாஸம் – இருப்பது தனது இலட்சியத்தை – உபாசனை தெய்வத்தை விட்டகலாமல் அதன் அருகிலேயே உடலால் வசித்து உணவால் நெருங்கி உணர்ச்சிகளை குவித்து ஒரு முகப்படுத்தி வைப்பதே உபவாசம்

– "ஆரோக்கியம்"

உபவாசத்தின் பூரண பலனைப் பெற தருமம் புரிய வேண்டியது அவசியம். எங்களது சுவையான இனிப்பு மற்றும் கார பண்டங்களை வாங்கி நல்லவர்களுக்கு விநியோகிக்கவும்.

திருமணங்களுக்கு நாங்கள் பருப்புத் தேங்காய், அதிரசம், சீர்முறுக்கு ஆகியவற்றைத் தயாரித்துக் கொடுக்கிறோம்.

இனிப்புகள் : ரஸமலாய், சோன்பப்டி, கோதுமை அல்வா
காரம் : தட்டை, தேன்குழல், சீடை முதலியவை கைமுறுக்கு

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020
போன் : 412557

150, லஸ்தளம், பவுண்டன் பிளாசா பாந்தியன் சாலை, எழும்பூர்,
சென்னை-600 008

கிளை : காமதேனு சூப்பர் மார்க்கெட், அண்ணாசாலை, சென்னை-600 018



○ க. சமுத்திரம்



○ ஜெயலலிதா

## நகர்வலம்

# சமஸ்கிருதம் வேண்டாம்; தமிழில் பாடு!'

● ஏ.வி.எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் கவிஞர் தமிழன்பன் தலைமையில் கவியரங்கம். ஒரு தமிழ் எழுத்தாளர் கவிஞராய் அறிமுகமானார். எழுத்தாளர் — க. சமுத்திரம். கவியரங்கில் சபாஷ் பெற்றவர் '125 ஆண்டுகளாகியும், துணை வேந்தர்கள் பலர் மாறியும், கல்வி முறை மட்டும் கொஞ்சமும் மாறவில்லை' என்று கவிதை பாடிய மாணவி சித்ரா.

● மயிலை பாரதீய வித்யா பவனில் 'இலங்கையில் இரத்தக் கண்ணீர்' நூல் வெளியீட்டு விழா. அரங்குக்கு வெளியில் ஒரு இளைஞர் வந்திருந்தோர் பலருக்கும் பல புத்தகங்களையும் இலவசமாய் வழங்கிக் கொண்டிருந்தார். அத்தனையும் அவர் விலை கொடுத்து வாங்கியவையாம். அந்த இளைஞர் ஈழத் தலைவர் அமிர்தலிங்கத்தின் மகன்.

● குயின் மேரிஸ் கல்லூரி மாணவர் யூனியன் தொடக்க விழாவுக்கு வந்த வி. ஐ. பி. பாபுலர் பெண்மணி. தாம் அரசியல்வாதி என்ற முறையில் வரவில்லை என்று ஆரம்பித்து அழகாய் ஆங்கிலத்தில் பேசினார். அரசியலுக்கு வந்த பின் ஆங்கிலச் சொற்பொழிவுக்கு சான்ஸ் இல்லை என்று வருத்தப்பட்டார். பெண்மணி யாரென்று சொல்லாமலேயே தெரிந்திருக்குமே? (கொசுறு: இந்தியாவின் முதல் பெண்கள் கல்லூரி க்யூ. எம். வி. தானும்.)

● ராமலிங்கர் பணி மன்றத்தின் 'வள்ளலார் — காந்தி விழா' தொடக்க உரையில் அமைச்சர் ஆர். எம். வீ. 'வள்ளலார்—காந்தி விழாவுக்கு வயதானவர்கள்தான்வருகிறார்கள் என் பிள்ளையோ, மகாலிங்கத்தின் பிள்ளையோ வருவதில்லை' என்று இளைய தலைமுறையைச் சாடிக் கொண்டிருந்தபோது, முன் வரிசையில் அமர்ந்திருந்த ஓர் இளைஞர்கஷ்டப்பட்டுத் தம் குறும்புச் சிரிப்பை அடக்கிக் கொண்டிருந்தார். பெயர் — மாணிக்கம். அவர் நா. மகாலிங்கத்தின் மகன்.

● லேடி காந்தி மண்டபத்தில் டி. கே. எஸ். கலைவாணனின் இசை நிகழ்ச்சி. 'கந்த பிரம்ம'.... சமஸ்கிருத ஸ்லோகத்தை மிகவும் நன்றாகப் பாடிக் கொண்டிருக்கையில், ''சம்ஸ்கிருதம் வேண்டாம்; தமிழ் பாட்டு மட்டும் பாடவும்'' என்று சொல்லி ஒரு அரக அதிகாரி தடை போட்டது அவ்வளவு நன்றாகப் படவில்லையே!

—சின்னக் கொலம்பஸ்



○ ஆர். எம். வீ.



○ கலைவாணன்





# திக்குத் தெரியாத காட்டில் ஒதுக்குத் தேடி...

அண்ணமையில் வனவிலங்கு வார விழாவையொட்டி தமிழக அரசின் செய்தி மக்கள் தொடர்புத்துறை பத்திரிகையாளர்களுக்கான சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்தது. அதில் கலந்துகொண்ட நம் நிருபர் எழுதுகிறார்:

## களக்காடு

- இந்த வனவிலங்கு சரணாலயத்தில் புலி, சிறுத்தை, காட்டு நாய், யானை, மலைப் பாம்பு மற்றும் பலவகை மான்கள், பல்லிகள், அணில்கள் இருக்கின்றன என்று வனத்துறை அதிகாரி சொன்னார். ஆனால் பாவம்! இவை எதற்குமே எங்கள் பத்திரிகையாளர் குழுவைக் காண்கிற அதிர்ஷ்டமில்லை! என்ன செய்ய?
- இந்தச் சரணாலயத்தின் ஸ்பெஷாலிட்டி ''சிங்க வால் குரங்கு''கள். சிங்கம் போல, முடி அடர்ந்த முகமும், மயிர்க் குஞ்சமுடைய நீண்ட வாலும் கொண்டவை இவை. இவை வேகமாய்க் குறைந்து வந்தன. இவற்றின் எண்ணிக்கையை அதிகரிக்க அரசு எடுத்துக்கொண்ட முயற்சியின் விளைவே இச் சரணாலயம்.
- லேட்டஸ்ட் கணக்குப்படி சுமார் 200 சி.வா. குரங்குகள் இருப்பதாகத்தெரிகிறது. மொத்த புலிகள் மூன்று.
- இங்கே காடுகளை அழிப்பதால், மழையின்றி வறட்சி என்கிறோம். அங்கே போனால் மழை இல்லாததால் மரங்கள் காய்ந்து விடுகின்றன என்கிறார்கள்.

## குற்றாலம்

- குற்றாலம் போகச் சரியான சீசன், 'சீசன்' இல்லாத சீசன்தானோ என்று தோன்றுகிறது. சீசனில் 100, 150 என்று வாடகைக்கு விடப்படும் ரூம்கள் இப்போது 20, 25க்குக் கிடைக்கின்றன.
- அருவிப் பகுதியில் நடந்த சின்ன உரையாடல், அதன் பின் விளைவு:

''அதோ அந்த ஆள் என்ன டக்கரா மசாஜ் செய்து விடறார் பாரேன்!''

—இதைக் கேட்டவுடன் மசாஜ் செய்து விட்டுக் கொண்டிருந்தவருக்கு ஏக குஷி.

விளைவு — பலமாய்க் கையை மடக்கி, குத்தி, குத்தி மசாஜ் செய்ய ஆரம்பிக்க, இவர் ''ஐயோ! உடம்பு வலி தாங்கலை! போதும் உன் மசாஜ், ஆளை விடு'' என்றார்.

- குற்றாலத்தை விட்டுக் கிளம்பி, பாபநாசத்தின் 'திருவள்ளுவர் கல்லூரி'யை பஸ் தாண்டியபோது வெடித்த ஜோக்:

''இந்தக் கல்லூரியில் மாணவர் தப்பு செய்தால் என்ன தண்டனை தருவார்கள்?''

''ஒன்னே முக்கால் அடி!''

## கீரிப்பாறை:

- குமரி மாவட்டத்தில் ரப்பர் தோட்டங்கள் நிறைந்த காட்டுப் பகுதி ''கீரிப்பாறை''. மற்றபடி கீரிக்கும் இவ்விடத்



துக்கும் எந்தச் சம்பந்தமும் இருப்பதாய்த் தெரியவில்லை.

• எந்த இடத்திலிருந்து பார்த்தாலும் ரப்பர் மரங்கள் மிக அழகாக — வரிசையாய்த் தெரிகின்றன.

• ஒவ்வொரு மரத்திலும் ஒரு கொட்டாங் கச்சி பொருத்தப்பட்டுள்ளது. ஒரு நாள் விட்டு ஒரு நாள் கீறிவிடப்படும் ரப்பர் மரங்களிலிருந்து வரும் ரப்பர் பால், வழிந்து, கொட்டாங்கச்சியில் சேகரிக்கப்படுகிறது. (கொட்டாங்கச்சி பயன்படுத்தக் காரணம் இவை எளிதில் கிடைப்பதும், விலை குறைவாக இருப்பதுமே.)

• ரப்பர்ப் பாலைத் தடுப்புகள் வைக்கப் பட்ட தொட்டிகளில் தேக்கி, திடப்படுத்தி, தயாரிக்கப்படுவது 'ஷீட்'. இது பருமனும், மிக மிருதுவாகவும் இருக்கும். ஆனால் இந்தத் தயாரிப்பில் லாபம் குறைவு.

• திரவ ரப்பருக்குத்தான் ஏக கிராக்கி. தினமும் 6–7 டன் திரவ ரப்பர் கீரிப் பாறை அரசு ரப்பர் தொழிற்சாலையில் உற் பத்தியாகிறது. இதிலிருந்துதான் டயர் போன்றவைகளும், குடும்பக் கட்டுப்பாடு சாதனங்களும் தயாரிக்கப்படுகின்றன.

• இந்தியாவின் மொத்த ரப்பர் உற்பத்தியில் முதலிடம் கேரளம் (90 சதவிகிதம்) அடுத்தது தமிழகம் (7 சதவிகிதம்).

• தமிழக ரப்பர் மரங்கள் மிகச் செழுமை யானவை. ரப்பர் மரம் நோய்களுக்கு ஆளாவதில்லை. இதனால் உற்பத்திச் செலவு கணிசமாய்க் குறைகிறது.

• ஒரு ரப்பர் மரத்தின் ஆயுட்காலம் 40 வருடங்கள். பொதுவாக ஏழாம் ஆண்டிலிருந்து பால் தர ஆரம்பிக்கிறது.

• இந்தப் பகுதியில் பலர் தம் வீட்டுத் தோட்டங்களில், நாம் தென்னை வளர்ப்பது போல் நாலைந்து ரப்பர் மரங்களை வைத்துக் கொண்டு தினமும் பால் எடுத்து, ரப்பராக்கிப் பக்கத்து நகரங்களில் கிலோ 20 ரூபாய் வரை விற்றுவிடுகிறார்கள்.

## முண்டந்துறை

• முண்டந்துறை திருநெல்வேலி மாவட்டம், பாபநாசம் பக்கத்தில் இருக்கும் பசுமையான காட்டுப் பகுதி. புலிகள் சரணாலயமாய் ஆரம்பிக்கப்பட்டது. வேறு பல மிருகங்களும் உண்டு.

• நாங்கள் எல்லோரும் இரண்டு மணி நேரம் காட்டில் அலைந்து, களைத்துப்போனது தான் மிச்சம். கண்ணில் பட்டதென்னவோ ஒரே ஒரு புள்ளி மானும், சில சாதாரணக் குரங்குகளும்.

• ஒரு மான் குட்டியை ஒரு வனத் துறை ஊழியர் தூக்கிக் கொண்டு வந்தார், காட்டிலுள்ளிருந்து. ஒரு வாரக் குட்டி. தாயை வேறு ஏதாவது மிருகம் அடித்துக் கொன்றிருக்கலாம் என்றார்கள். மான் குட்டிக்குப் பாட்டிலில் பால் புகட்டினார்கள்.

• ஆங்காங்கே கொம்புகளில் பெரிய வெண் கற்களைப் பொருத்தி வைத்திருக்கின்றனர். அவை பாறை உப்புக் கற்களாம். மிருகங்களுக்கு உப்புச் சத்து தேவையல்லவா! அவ்வப்போது வந்து உப்புக் கற்களை நக்கிச் செல்கின்றன.

## ராஜபாளையம்

• ராஜபாளையத்தில் வனவிலங்கு வார நிறைவு விழா.

• மேடையில் கறுப்புச் சட்டைக்காரர்கள் மயம். 'நேரம் குறைவு. சுருக்கமாய்ப் பேசவும்' என்று ஆர். எம். வீ. முதலிலேயே சொல்லி விட்டார். (இதய தெய்வம் எம்.ஜி. ஆர்., பாசமிகு எனதருமை அண்ணன் அடைமொழி சொல்வதில் எல்லாருமாய்ச் சேர்ந்து செஞ்சுரி போட்டார்கள்.)

• தாமரைக்கனி எம். எல். ஏ. ''வன விலங்கு பாதுகாப்புக் குழு என்று வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். குழுவினரில் பலருக்குத் துப்பாக்கி லைசென்ஸ் இருப்பதாய்த் தெரிகிறது. இவர்களெல்லாம் லைசென்ஸைத் திருப்பித் தரவேண்டும். இவர்கள் காட்டு விலங்குகளை வேட்டையாடுவதில்லை என்று உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும்'' என்று கொஞ்சம் ஆவேசமாய்ப் பேசினார்.

• ராஜபாளையம் பகுதி காடுகளில் பலர் இஷ்டப்படி மரங்களை வெட்டுவதைத் தடை செய்ய வேண்டும் என அமைச்சரிடம் மனு தரப்பட்டது. இது பற்றி அவர் பேசியது: ''இந்தக் குற்றச்சாட்டை என்னால் நம்பாமல் இருக்க முடியவில்லை. காரணம் மக்கள் மனுத் தந்திருக்கிறார்கள். அதே சமயமும் முழுமையாய் நம்பவும் முடியவில்லை. காரணம் அதிகாரிகளிடம் நான் நம்பிக்கை வைத்திருக்கிறேன். எனவே குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்ல வேண்டியது அதிகாரிகள் கடமை. தவறு செய்பவர்கள் கடும் தண்டனைக்குள்ளாவார்கள் என்பது உறுதி!''

# வட்டமேஜை

● உங்களது 9-10-83 தேதியிட்ட கல்கியில் 'பாங்க் ஆப் தமிழ்நாடு' பற்றி எழுதும் போது இந்தியாவின் முதல் பாங்க் பஞ்சாப் நேஷனல் பாங்க் என்று குறிப்பிட்டுள்ளீர்கள். பி.என்.பி. தொடங்கப்படுவதற்கு நான்கு வருடங்களுக்கு முன்பே அலகாபாத் பாங்கி தன்னுடைய வெள்ளி விழாவைக் கொண்டாடிவிட்டது. 24-4-1865ல் இருந்து இன்றுவரை வங்கிப் பணியைச் சிறப்பாகச் செய்து வரும் அலகாபாத் வங்கியே இந்தியாவின் முதல் வங்கி.

சென்னை-4 அலகாபாத் வங்கியின் மயிலாப்பூர் கிளை ஊழியர்கள்.

● மிருதங்க சக்கரவர்த்தியாய் நடிப்புச் சக்கரவர்த்தி சிவாஜி செய்திருப்பதை—சிறப்பிடம் தந்து போற்றியதுமிகவும் பொருத்தம்.

திருப்பூர் எம். கதிரேசன்

மணக்க வைத்தது மாணவர் மலர்!

● பக்கத்துக்குப் பக்கம் மாணவ மணிகள் ஜமாய்த்து விட்டார்கள்!

லால்குடி ஆர். சிவராஜ்

● பிரதமரின் அணு ஆயுதப் பேச்சு நூற்றுக்கு நூறு சரி. உங்கள் தலையங்கமும் நூற்றுக்கு நூறு சரியே!

அரவக்குறிச்சிப்பட்டி எம். அசோக்ராஜா

● ஒவ்வொரு பெண்ணுக்கும் பிறந்த வீட்டின்மேல் 'இருக்கக் கூடிய இயல்பான பாசத்தைத் தத்ருபமாகக் காட்டியிருந்த 'குருடன்' சிறுகதை மிக அருமை!

திண்டுக்கல் திலகவதி

● இந்த வார இதழ் மாணவ - மாணவியர் இதழாகச் சிறப்புற அமைந்தது குறித்து மிக மகிழ்ச்சி. ஒன்பது பதக்கம் பெற்ற குமாரி ராதிகாவை உமது அட்டையில் பிரசுரித்துக் கல்கிக்குப் பெருமை சேர்த்து விட்டீர்கள் போங்கள்!

மோகனூர் பாலகிருஷ்ணன்

● மாணவர் சிறப்பிதழைச் சிறப்பாக வெளியிட்டு என் போன்ற மாணவர்களின் திறமையை வெளிப்படுத்திய கல்கிக்கு மதுரை சௌராஷ்டிரா கல்லூரியின் மாணவர்கள் சார்பில் நன்றி.

மதுரை-1 சி. எல். ரவிச்சந்திரன்
பி.எஸ்ஸி. முதலாண்டு, இரசாயனம்

● ''இரகசிய நோய் பற்றிய பகிரங்க உண்மைகள் கட்டுரை மிகச் சிறப்பாக அமைந்திருந்தது.

திருவானைக்கோயில் வி.ஆர்.டி. கிருஷ்ணன்

● ஆசிரியர் இ. ராஜேந்திரன் அவர்களின் 'அபிமானவல்லி' சரித்திரத் தொடர்கதை ஆரம்பமாக இருக்கும் தீபாவளி சிறப்பிதழை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

மதுரை-1 எஸ். சாகுல் ஹமீது

● சிவசங்கரியின் மாலையில் பூக்கும் மலர்கள் கதைதான் வாரா வாரம் மனத்தைத் தொடுகிறது என்றால் அதற்கு ஓவியர் மாருதி போடும் படம் தொடர்கதைக்கு மெருகேற்றுகிறது.

சிதம்பரம் க. ரஸியா பேகம்

● வறுமையில் உழலும் ஓர் ஏழைக் குடும்பத்தைக் கண்ணெதிரே காட்டி அந்த ஏழைச் சிறுவனின் உயிரைப் பறித்த விதம் வேறு யாருக்கும் ஏற்படவேண்டாம். அண்ணாதாசனின் சிறுகதை மனத்தை உலுக்கிவிட்டது.

அத்திமலைப்பட்டு மதுஜெயபால்

● திரு மாலன் எழுதிய பாங்க் ஆஃப் தமிழ்நாடு கட்டுரையைப் படிக்கும்போது சரித்திரம் படிப்பது போன்ற உணர்வு. அதன் பெருமைகளையும், செய்த உதவிகளையும் நினைக்கும் போது நெஞ்சைத் தொடும்படி அமைந்திருந்தது.

லால்குடி எம். இராஜேந்திரன்

● சிறுகதைகளிலும், துணுக்குகளிலும் மாணவர்கள் ஜமாய்த்ததைப் பார்த்தால் 'எழுத்தாளர் பஞ்சமே' வராது என்று அடித்துச் சொல்லலாம்.

ஸ்ரீரங்கம் ஆர். ஸ்ரீநிவாசன்

# கல்கி

# தீபாவளி மலர் 1983



புரட்டப் புரட்ட வளரும் பக்கங்கள்;
படிக்கப் படிக்கத் தெவிட்டாத கதை கட்டுரைகள்;
பார்க்கப் பார்க்க ரசனை ஊட்டும் வண்ணப் படங்கள்;
சிரிக்கச் சிரிக்க முடிவில்லாத நகைச்சுவை அம்சங்கள்

*

**தீபாவளியின் புனிதம், மகிழ்ச்சி,
வண்ணங்கள் அனைத்தையும் அள்ளித்தரும்
1983 கல்கி தீபாவளி மலர்**

*

உங்கள் தேவைக்கு உடனே உள்ளூர்
ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும்

*

**விலை ரூ. 20/-**

தபாலில் பெற விரும்புவோர் ரூ. 25
டிராப்ட் அல்லது மணி ஆர்டர் அனுப்பவும்

*

**மானேஜர் கல்கி, கிண்டி, சென்னை-600032.**



## 12

ஐந்தடி உயரத்துக்கு வரிசையாய் அடுக்கியிருக்கும் செங்கல் தூண்கள், அம்பாரமாய்க் கொட்டப்பட்டிருக்கும் மணல் மேடுகள், அஸ்திவாரத்துக்குப் போக மிஞ்சிவிட்ட ஒண்ணரை அங்குல ஜல்லிக் குவியல்; நீள நீளமாய் ஓர் ஓரத்தில் இடத்தை அடைத்துக் கொண்டு படுத்திருக்கும் கம்பிகள்...

இத்தனைக்கும் மேலாக ஜகஜகவென்றிருக்கும் ஆட்கள்; அவர்கள், அவர்களின் செய்கைகள் எழுப்பும் நானாவித ஓசைகள்.

சித்தாள்கள் அலட்சியத்துடன் பாண்டுகளைத் தரையில் வீசி எறியும் ஜணீர் ஜணீர் சப்தங்கள்....

எதன் மேலோ குடமாய்த்தண்ணீரை ஊற்றும் ஜொர்ரென்ற ஓசை.

செங்கலை இரண்டாகக் கொனியால் கொத்தனார் உடைக்கும் ஒலி....

இடையிடையில் 'என்னம்மே... இன்னிக்கு ஆனாலும் ரொம்ப ஷோக்காத்தான் கீறே?'; 'ஐய, தம்மாத்தூண்டு புவ்வில இருந்தாக் குடுன்னு'; 'நேத்து சொக்கிய அவ புருசன் பெண்டு நிமித்திட்டான், தெரியுமாங்காட்டியும்?' — என்ற பேச்சுக்கள்...

கூடவே, ''ஏய்.... ஏய்... என்ன பேச்சு அங்கே? ஆவட்டும்....ஆவட்டும்... கலவை காயுதில்லே?''—என்ற மேஸ்திரியின் விரட்டல்.

வண்டியை நிழலில் நிறுத்தின கௌரி, உடனே இறங்காமல், அப்படியே உட்கார்ந்து அத்தனையும் ரசித்தாள்.

கட்டிடம் முதல் மாடி வரை வந்தாயிற்று.

இன்னொரு மாடி பாக்கி....

ஏற்கனவே பத்து மாதங்கள் ஓடிவிட்ட மாதிரி, கட்டிடம் முழுமை பெற இன்னுமொரு வருஷம் முழுசாக நகர்ந்துவிடுமோ!

> இத்தாலியில் வேலையில்லாத் திண்டாட்டம் உச்ச அளவில் இருக்கிறது. தபால் துறையில் இருந்த ஐந்து காலி இடங்களுக்கு 13,000 பேர்கள் விண்ணப்பித்திருந்தார்களாம்.
>
> இத்தாலியைப்பார்த்து நாம் ஆறுதல் அடைவோமாக!
>
> —எஸ். வெங்கடேசன்



பூச்சு, தரை, வொயரிங், ஸானிடரி ஃபிட்டிங்ஸ், லிஃப்ட் பொருத்தல் என்று எத்தனை வேலைகள் வரிசையாய் இருக்கின்றன.

பரவாயில்லை.

ஒரு வருஷம் கூட ஆனாலும் கட்டிடம் சுத்தமாக அமைவது முக்கியம்.

இவள் வந்து விட்டதைத் தெரிந்து கொண்ட வாட்ச்மேன் வண்டியின் அருகில் வந்து 'வணக்கம்மா' என, அதை ஏற்றுத் தலையசைத்தபடி கௌரி கீழே இறங்கினாள்.

''என்ன ஷண்முகம், ராத்திரி சிமெண்ட் வந்ததா?''

''வந்துச்சம்மா.''

''எவ்வளவு?''

''பத்து டன்னுங்க....''

''எண்ணித்தானே இறக்கினே?''

''ஆமாங்கம்மா... இருநூறு மூட்டை ஸ்டோர் ரூம்ல அடுக்கிட்டேன். இன்னி வேலைக்குப் பழைய ஸ்டாக்கிலேந்து பத்து மூட்டை எடுத்து, மேஸ்திரி கிட்டக் கொடுத்திருக்கேன்.''

''கம்பி வளைக்க பார் டெண்டர் வந்தாரா?''

''இன்னும் இல்லீங்கம்மா.''

''அந்தோணி என்ன பண்றான்? போய் ஒரு நடை பார்த்துட்டு வரச் சொல்லு....''

''சரிங்க.....''

கௌரி கால்களை ஊன்றி வைத்து, மரப் பலகைகளில் ஏறி, பெரிசாய் இருந்த கூடத்தை அடைந்தாள்.

—ரிஸப்ஷன் ஹால் இத்தனை பெரிசாய் வேணுமா பாலா?

—இதுகூடப் போதுமா, போதாதான்னு எனக்குச் சந்தேகமாக இருக்கு கௌரி... நாற்பது ஐம்பது பேர்கள் ஒரே சமயத்தில் காத்திருக்கவேண்டி வந்தாலும், சௌகரியமா உட்கார்ந்திட்டிருக்காப்பல இடம் வேணும்.

—நாற்பது, ஐம்பது பேரா?

—ஒருவேளைக்கு இப்பவே சரியா இருவது, இருவத்தைஞ்சு கேஸ் பாக்கறேன். நாளைக்கு ப்ராக்டீஸ் இன்னும் வளராதா? மோர் ஓவர், பேஷண்ட் கூட வர்ற ஆளுங்களும் வசதியா உட்கார இடம் வேணுமா? ஆர்கிடெக்ட் கிட்ட ரிஸப்ஷன் ஹால் கண்டிப்பா பெரிசா இருந்தாகணும்னு சொல்லிடு... நாலு ஃபேன் இருக்கணும். காத்தோட்டமா இருக்கப் பெரிய பெரிய ஜன்னல்கள் முக்கியம்.

கூடத்தை ஒட்டியிருந்த அறைக்குள் கௌரி நுழைந்தாள்.

இதுதான் பாலாஜியின் கன்ஸல்டேஷன் ரூம். பக்கத்திலேயே அட்டாச்ட் பாத்ரூம்.

நோயாளியைப் பரிசோதிக்க மேஜை, எக்ஸ்ரே படத்தைப் பார்க்க விளக்குடன் கூடிய ஸ்டாண்ட், ஒரு வாஷ் பேஸின். இவை தவிர, பாலாஜியின் உபயோகத்துக்கான டேபிள், நாற்காலி — என்று எல்லாவற்றையும் கஷ்டப்படாமல் அடக்கிக் கொள்ளக் கூடிய விஸ்தாரமான அறை.

உங்க ரூமுக்கு எதிரிலே நாலு அறைகள் எதுக்கு பாலா?

—அவசரமா இன்ஜெக்ஷன் போட, முதலுதவி செய்ய ஒரு டிஸ்பென்ஸிங் ரூம். மத்தது வேற யாராவது டாக்டர் இங்க

தன் நோயாளிகளை வரச் சொல்லிப் பரிசோதிக்க விரும்பினா அதுக்கு.

வரவேற்புக் கூடத்துக்கு அந்தப் பக்கமாய் மாடிப் படி, ஒரு லிஃப்ட்; நோயாளிகளை வீல் சேர், ஸ்ட்ரெச்சரில் உட்கார, படுக்க வைத்து எடுத்துச் செல்ல வசதியாய் ராம்ப்....

—முதல் மாடியிலே ஆபரேஷன் தியேட்டர், பக்கத்திலே போஸ்ட் ஆப்பரேட்டிங் ரூம்... இடது பக்கமா இரண்டு இன்டென்ஸிவ் கேர் அறைகள். அப்புறம் பத்து தனி அறைகள், வித் அட்டாச்ட் பாத்ஸ்...இதுல அஞ்சு ரூம்லே ஏ. ஸி. போடலாம்னு இருக்கேன். இரண்டாவது மாடிலே மிடில் கிளாஸ் நோயாளிகள் தங்கற மாதிரி பத்து ரூம்ஸ், ஒவ்வொண்ணுலேயும் இரண்டு படுக்கைகள், இதுக்கும் அட்டாச்ட் பாத்ரூம் உண்டு. வலது பக்கமா ஒரு பெரிய ஹால். இதான் ஜெனரல் வார்ட். இது இருவது பெட் போடறாப்பல இருக்கணும். இலவச சிகிச்சை பெறப் போற அத்தனை நோயாளிகளும் இங்கதான் இருப்பாங்க.

கேட்டுக் கொண்டிருந்த ஆர்கிடெக்ட் ராஜன் புருவங்களைத் தூக்கினார்.

—இருவது பெட் தேவையா டாக்டர்? நாலு, இல்லே ஆறு இருந்தாப் போதாதா? ஜெனரல் வார்டைச் சின்னதாக்கிட்டா இன்னும் நாலு தனி ரூம்ஸ் போடலாமே....

பாலாஜி சிரித்தான்.

—என்னைக் கேட்டா ஜெனரல் வார்ட் இதுகூடப் போதாதுன்னுதான் சொல்வேன் ராஜன். நாளைக்கு நர்ஸிங் ஹோம் நல்ல விதமா நடந்தா மூணாவதுமாடியையும் கட்டி, முழுக்க முழுக்க இலவச சிகிச்சை வார்டா செஞ்சிடணும்னே நான் ஆசைப்படறேன்.

அறைகளில் புகுந்து கட்டிட வேலைகள் சரியாக நடந்து கொண்டிருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே நடந்த கௌரிக்கு அன்றைக்கு ராஜனும், பாலாஜியும் வெளியில் புறப்பட்டுப் போனதும், இவள் அருகில் வந்து அமர்ந்து சாம்பசிவம் 'என்ன குணம்மா... மாப்பிள்ளைக்கு என்ன உசந்த குணம்மா....' என்று மாய்ந்து போனதும், 'நீ கொடுத்து வச்சிருக்கே கௌரி — காட் ப்ளெஸ் யு டு' என்று உருகியதும் நினைவுக்கு வந்தது.

இந்த நர்ஸிங் ஹோம் கட்டுவதற்காக அப்பா எத்தனை அலைச்சல், பாடு படுகிறார் என்பதும் கூடவே ஞாபகத்துக்கு வர, சட்டென்று கண்கள் ஈரம் கட்டிக் கொண்டன.

பாங்கில் டெபாஸிட்டாக வைத்திருந்த மூன்று லட்சத்தை நிலம் வாங்க எடுத்தவர் பாலாஜியும் கௌரியும் தடுத்ததைக் காதில் போட்டுக் கொள்ளாமல் மாம்பலத்தில் இருந்த பெரிய வீட்டை இரண்டே கால் லட்சத்துக்கும் ஷேர்களை எண்பத்தைந்தாயிரத்துக்கும் விற்று, அவற்றை நர்ஸிங் ஹோம் கட்டுவதற்கென்று கௌரி பேரில் தனி சேவிங்க்ஸ் அக்கௌண்ட் ஆரம்பித்துப் போட்டார்.

—எதுக்குப்பா வீட்டை விக்கணும்? பாலா ரொம்ப வருத்தப்பட்டுக்கறார்.

—அசடு மாதிரி பேசாதே கௌரி... நீங்களும் என்கூடச் சேர்ந்து இருக்க மாட்டேங்கறீங்க.... அப்புறம் என் தனி ஒருவனுக்கு அத்தனை பெரிய வீடு எதுக்கு? ரொம்ப நாளாவே பெரிய வீட்டைக் கொடுத்துட்டு ஆள்வார்ப்பேட்டை வீட்டுக்குப் போயிடணும்னு நினைச்சுட்டு இருந்ததைச் செயலாக்க இப்பத்தான் நேரம் வந்திருக்கு. வாடகைக்கு விடறதும் இந்த நாளில தொந்தரவாப் போயிட்டதே... அதான் சரி, வித்துடுவோம்கிற முடிவுக்கு வந்திட்டேன். ஆள்வார்ப்பேட்டை வீடு நர்ஸிங் ஹோமுக்குக் கிட்டக்க.... நினைச்சப்ப உங்களை வந்து பார்க்கலாம்.

—வீடு, ஷேர்களை வித்திட்டது எனக்கும் அதிகமாத்தான் படுதுப்பா. பாங்க்ல கடன் வாங்கி யிருக்க முடியாதா?

—முடியும். ஆனா எதுக்கு? நம்ம கிட்டயே வழி இருக்கறப்போ, இன்னொருத்தன் தயவு எதுக்கு? ம்? இன்ஃபாக்ட், நா இப்ப ஒண்ணு சொன்னா, நீ பதற்றப்படக் கூடாது. நமக்கு இரண்டு எடத்துல லாண்ட்ஸ் இருக்கறது உனக்குத் தெரியும். அச்சரப்பாக்கம் நிலத்தை வச்சுக்கிட்டு, மன்னார்குடி நிலத்தை வித்திடலாம்கிற முடிவுக்கு வந்திருக்கேன்.

—எதுக்குப்பா? நர்ஸிங் ஹோம் கட்டற செலவுக்குத்தானே... ஓ.... நோ... நிச்சயம் பாலா இதை ஒத்துக்க மாட்டார். நானும் சம்மதிக்க மாட்டேன். இருக்கிறதை வைச்சுக்கிட்டே மானேஜ் பண்ணிடலாம்ப்பா.... ப்ளீஸ்.

—இதுக்குத்தான் முதல்லேயே பதற்றப் படாதேன்னு சொன்னேன் கௌரி... என்னைப் பேச விடறியா? மன்னார்குடி பக்கத்தில நில சம்பந்தமா அப்பப்ப கலவரம் நடக்குது. இங்கிருந்து ஒண்டியா அதை என்னால மானேஜ் பண்ணவே முடியலே. எங்க பார்த்தாலும் உழுறவனுக்குத்தான் நிலம் சொந்தம்கிற பேச்சு ஜாஸ்தியாப்

உசிலை மணி: அந்த ஆள் வீட்டு வாசப்படி கொஞ்சம் அகலமா இருக்கணும். நீங்க என்ன நினைக்கிறீங்க?

தயிர்வடை தேசிகன்: அகலமெல்லாம் போதும். உயரம் தான் பத்தலே!

-ஆர். எஸ். சுப்பிரமணியன்



# வெப்பத்தால் நீங்கள் வலுவிழந்து வாடுகையில்...



உங்களுக்கு
நம்பகமான
க்ளாக்ஸோஸ–Dயின்
புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளுகோன்-டி**®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளுகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளுகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளுகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட-விளையாட்டிலும், வேலையிலும். க்ளுகோன்-டி—உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.






**வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு வளமூட்டிய அசல் க்ளுகோஸ் பவுடர்—*க்ளாக்ஸோ* அளிக்கிறது.**

HTB-GIL-6591TL

போச்சு. நல்ல விலை கிடைச்சு, கொடுத்திட்டாக் கவலை இல்லாம இருக்கலாம்.

—போங்கப்பா நீங்க என்னைச் சமாதானம் பண்ண இப்படிப் பேசறீங்க.

—நிச்சயமா இல்லே கௌரி. யோசிச்சு ப்ராக்டிகலா நடக்க நினைக்கிறேன். தட்ஸ் ஆல். அச்சிறுபாக்கம் நிலத்தோட விளைச்சலே எதேஷ்டமா இருக்கு. என் செலவுகளுக்கு நிலத்துலேர்ந்து வர்ற வரும்படியும், கம்பெனி டெபாஸிட்ஸ் வட்டியுமே வெள்ளம். வீணு எதையாவது நினைச்சி மூட்டுக் கட்டை போட்டுக்கிட்டு இருக்காம, பீ சென்ஸிபிள். மாப்பிள்ளை கிட்டேயும் எடுத்துச் சொல்லு. உடம்புக்கு முடியாமப் போனு, நான் உங்களோட வந்துடறதாத்தான் இருக்கேன். ஏம்மா, வைச்சிப்பே இல்லே?

இப்படித் தீர்மானமாகவும் விளையாட்டாகவும் பேசிய சாம்பசிவம் பெண்ணையும் மாப்பிள்ளையையும் சம்மதிக்க வைத்து விட்டதில் தங்கு தடையில்லாமல், வேலைகள் நடந்து, உயர்ந்த சாமான்கள், தரமான கவனிப்புமாக நர்ஸிங்ஹோம் வளர்ந்து வருகிறது.

''பார் டெண்டர் வந்திட்டாருங்கம்மா..''

கௌரி கவனத்தைக் கம்பி வளைப்பவர் பால் திருப்பினுள்.

''என்னங்க... நேத்தே வரேன்னு சொன்னீங்க. இன்னிக்கும் வேலைய ஆரம்பிக்காட்டி எப்படி?''

''இனிமேயும் தாமதம் ஆகாதுங்க, மன்னிச்சிடுங்க.''

அவன் நகர்ந்ததும் கௌரி கீழே வந்து, ஸ்டோர் ரூமை ஒரு பார்வை பார்த்துவிட்டு, பக்கவாட்டில் வந்து நின்றுள்.

இங்குதான் பார்மஸி இருக்கப் போகிறது.

அங்கு கான்டீன்.

சற்றுத் தள்ளிக் குழந்தைகள் விளையாட ஊஞ்சல், சறுக்கு மரம் எக்ஸட்ரா...

சுற்றிலும் குளுமையான பச்சைப் புல்வெளி. உயர உயரமாய் மரங்கள் நிழலைப் பரத்திக் கொண்டு.

—தோட்டம் அழகா இருக்கணும். நோயாளிகளுக்கு இதம் தர்ற மாதிரி லானும், மரமுமாய் பிளான் பண்ணி நடணும்னு நீ சொல்றதை ஒப்புக்கறேன். ஆனு, குழந்தைகள் விளையாட இடம் எதுக்குடார்லிங்?''-

—அவுட் பேஷண்டா வர்ற பெண்களும், கணவனுக்குத் துணையா வர பெண்களும் குழந்தைகளை யார் கிட்டயும் விட முடியாம, பலசமயம் கூடவே கூட்டிட்டு வந்து, இங்கு காத்திட்டிருக்கிற நாழிலே அதுங்க அழத் துவங்கி, சமாளிக்க முடியாமக் கஷ்டப்படறதை நான் பார்த்திருக்கேன் பாலா... அந்த மாதிரி இக்கட்டு இருக்கறவங்க குழந்தைகளை இங்கே விளையாட விட்டுட்டு, நிம்மதியா இருக்கலாம். ஒரு ஆயா போட்டுட்டம்னு, இட்'ஸ் பிகம் எ ஸேஃப் ப்ளேஸ். ஆயா கிட்ட ஒரு டப்பா பிஸ்கட்டைக் கொடுத்து, ஆளுக்கு ஒண்ணு கொடுத்துக் கவனமாப் பாத்துக்கச் சொல்லிட்டா கவலையே இல்லே; எப்படி?

—க்ரேட்... இந்த மாதிரி ஐடியா வெல்லாம் உனக்கு மட்டும் எப்படித் தோணுது கௌரி?



அவன்: என் ரெண்டாவது வழக்கை எடுத்து நடத்த ஒரு வக்கீலும் முன்வரல.

இவன்: ஏன்? என்ன காரணம்?

அவன்: பயம்தான்... ஏற்கனவே என் வக்கீலா இருந்தவரை ஆத்திரத்தில குத்திக் கொலை செஞ்சிட்டதாக என் மேல வழக்கு நடக்குது!

—சிவலட்சுமி

நிஜமான சந்தோஷத்துடன் பாலாஜி அன்று பாராட்டியது நினைவில் எட்டிப் பார்க்க, அவள் வாசலுக்கு வந்தபோது, என்ஜினியர் ஸ்கூட்டருக்கு ஸ்டாண்ட் போட்டுக் கொண்டிருந்தார்.

''குட்மார்னிங் பத்மநாபன்.''

''குட்மார்னிங் மேடம்... தினமும் நீங்க வர்றதுக்கு முன்னுல நான் வந்துடணும்னு பார்க்கறேன், முடியறதில்லே.''

''எங்க வீடு கிட்டக்க இருக்கு... நீங்க குரோம்பேட்டையிலேந்து இல்லே வர்றீங்க....''

சமாதானமாகக் கௌரி பேச, பத்மநாபன் மரியாதையுடன் புன்னகைத்தார்.

''ஆர்கிடெக்டைப் போய்ப் பார்த்திட்டு வரேன் மேடம்... நேத்து நாம தீர்மானம் பண்ணதை அவர் கிட்டச் சொன்னேன்: சரி, கவனிக்கிறேன்னுர். 'அடங்கா மார்பிள்' கடைக்காரர் மத்தியானம் மூணு மணிக்கு உங்களைச் சந்திக்க வர்றதாச் சொன்னுர். அப்புறம்.....''

அந்த வருஷம் நவம்பர் இருபத்தி ஏழாம் தேதி அவர்களது பதினோராவது திருமண நாள் எதேச்சையாக ஒரு முகூர்த்த நாளாக அமைந்துவிட, கௌரி விரும்பிய வகையில் நர்ஸிங் ஹோம் துவக்க விழாவை அந்தத் தினத்திலேயே அமர்க்களமில்லாமல் நடத்தினுர்கள்.

அடுத்து வந்த ஒன்பது வருஷங்களில் பாலாஜி நர்ஸிங் ஹோமின் பெயர் அதன் கைதேர்ந்த டாக்டருக்காக மட்டுமின்றித் திறமையான நிர்வாகத்துக்காகவும் தமிழ்நாடு பூராவும் ரொம்பத்தான் வேகமாகப் பரவிப் போனது. (தொடரும்)

இந்தக் கூட்டத்துக்கிடையில் புகுந்து புறப்படுவதா, பஸ்ஸைக் கோட்டை விடுவதா என்று மனசுக்குள் துவந்த யுத்தம் செய்து தவிக்கும் ஜகன் மீது கண்டக்டர் கதிர்வேலுவின் அருட் பார்வை விழுகிறது.

''என்ன சார், திருச்சிக்குத்தானே? ஏன் ஒதுங்கி நிக்கறீங்க? வாங்க, வாங்க.''

- ஆறு மாதப் பரிச்சயம் அழைக்கிறது.



அவன்: எங்க காலேஜ் ஹாஸ்டல் திறப்பு விழாவில் ஹெல்த் மினிஸ்டரோட பேச்சு ரொம்ப தமாஷா இருந்தது!

இவன்: அப்படியா?

அவன்: ஆமாம். ஏதோ ஹாஸ்பிட்டலைத் திறந்ததா நினைச்சுக்கிட்டு டாக்டர், நர்ஸ், பெட், மருந்து, அது இதுன்னு அவர் பாட்டுக்குப் பேசிக்கிட்டே இருந்தாரு!''

—ஆர். எஸ். சுப்பிரமணியன்

ஜன்னலோரத்து இருக்கையொன்று வாகாகக் கிடைக்கிறது. எத்தனை முறை பார்த்தாலும் அலுக்காத பலாத் தோப்புக்களையும், முந்திரித் தோட்டங்களையும் கண்கள் ரசிக்கத் தொடங்குகின்றன.

பயணச் சீட்டுக்குப் பணம் கொடுக்கப் பர்ஸை எடுக்கும்போது அம்மா எழுதிய 'இன்லாண்ட்' கையில் நெருடுகிறது.

''இன்று உன் மாமா அத்தை இருவரிடமிருந்தும் கடிதம் வந்தது. ப்ரியாவை உனக்குத் தர மாமா ஆசைப்படறார். விமலாவை உனக்காகவே அருமையாக வளர்த்திருப்பதாக அத்தை எழுதியிருக்கா. அப்பா யாரைத் தேர்ந்தெடுப்பார்னு உனக்குத் தெரியும். ஆனா இந்த விஷயத்திலே உன் சம்மதம்தான் முக்கியம். கல்யாணம் ஆயிரங்காலத்துப் பயிர். அதற்கு வித்திடறபோதே கவனமா இருக்கணும்.''

அவன் பதில் எழுதவில்லை. புறப்பட்டு விட்டான்.

மனக் கண்களில் அம்மாவின் புன்னகை தவழும் முகம் நிற்கிறது.

''நான் சந்தோஷமா இல்லேன்னு யார்டா சொன்னு?'' என்று கேட்கிறது அந்தப் புன்னகை! அதுதான் அம்மாவின் ஒரே ஆயுதமோ?

''அம்மா! இன்னிக்கு உங்க 'மேரேஜ் அனிவர்ஸரி' போல இருக்கே. நீயும் அப்பாவும் ஒரு சினிமா பார்த்துட்டு வாங்களேன்'' என்றால் அதற்கும் அந்தப் புன்னகைதான் பதிலாக வரும்.

ஆனால் அப்பாவின் சகலத் தேவைகளையும் அம்மா தவறாமல் கவனித்துச் செய்து தருவாள். பல சமயங்களில் காரியாலயத்திலிருந்து அப்பா கொண்டு வரும் கோப்புகளைக்கூட அப்பாவுக்கு உதவியாக அம்மா சரிபார்ப்பதுண்டு.

''அப்பாதான் பிடிச்சிருக்குன்னோ, பிடிக்கலேன்னோ எதுவும் சொல்றதில்லையே, நீ ஏன் வேலை மெனக்கெட்டு அவரிடம் புடவையைக் காட்டறே?'' என்று ஒரு முறை கேட்டு விட்டான்.

''என்னமோ, அது என் கடமைன்னு தோணித்து. செஞ்சேன். இதிலே என்ன குறைஞ்சு போச்சு?'' என்றாள்.

அவரைக் காயையும் புடலங் காயையும் கறி செய்வதா கூட்டுப் பண்ணுவதா என்பதிலிருந்து மொட்டை மாடித் தாழ்வாரத்துக்கு ஓலைக் கூரை வேய்வதா, ஓட்டுக் கூரை போடுவதா என்பது வரை எல்லாவற்றிலும் அவர் நாட்டாண்மைதானா?

வலக்கை தானாகவே கன்னப்புறத்துக் கிருதாவைத் தடவிப் பார்க்கிறது. அப்பாவுக்குப் பிடிக்காது என்பதற்காகவே அவன் வளர்த்துக் கொண்ட 'ஸைட் பர்ன்ஸ்!'

வண்டி விருத்தாசலத்தைத் தாண்டி விரைந்து கொண்டிருக்கிறது.

விநாயகரைத் தரிசித்துவிட்டுத் இல்லை நகரை நோக்கிக் காலார நடந்து வரும்

# வெற்றிகள் தோல்விகளானால்...

## கமலநாதன்



சாம்பசிவத்தின் மனம் அலை பாய்ந்து கொண்டிருக்கிறது. இத்தனை காலமும் எந்த விஷயத்திலும் எந்த விதமான எதிர்ப்பும் இல்லாமல் தம் காரியங்களைச் சாதித்து வந்தவர் இப்போது தோல்வியைத் தழுவ நேருமோ?

''ஒருவேளை மன்னிக்கு அவள் அண்ணா பெண் ப்ரியாவை ஜகனுக்கு வாங்கிக்கணும்னு ஆசை இருக்கலாம். ஆனா, நம்ம வீட்டிலே எப்போதுமே உன் பிடிவாதம் தான் ஜெயிச்சுண்டு வந்திருக்கு. இனி மேலும் உன் இஷ்டம்தான் ஜெயிக்கும்னு எனக்குத் தெரியும்...''

மீனா பொடி வைத்து எழுதியிருக்கிறாள். 'என் பெண் விமலாவை ஏற்காமல் ப்ரியாவை ஏற்றால் நீ மன்னியிடம் தோற்றுப் போனதாக அர்த்தம்' என்று சொல்லாமல் சொல்லியிருக்கிறாள்!

பாவி! இப்படிச் சவால் விடுவது போல் பேசி அடி நாளிலேயே என் வாழ்க்கையை நாசமாக்கினது போதாதா?

முப்பது வருஷங்களுக்கு முன்னால் நடந்த அந்தச் சம்பவம் மனத் திரையில் நிழலாடுகிறது.

அவனுடைய திருமணத்திற்காக மீனா வந்திருக்கிறாள். ஏதோ உப்புப் பெறாத விஷயத்தில் சாதாரணமாகத் தொடங்கிய விவாதம் அண்ணன் தங்கைக்குள் பெரிய வாக்குவாதமாக முற்றும்போது அம்மா குறுக்கிடுகிறாள்.

''ஏண்டி, அவனோடே என்ன தர்க்கம்? அவன் சுபாவம்தான் உனக்குத் தெரியுமே! நீதான் விட்டுக் கொடுத்துட்டுப் பேசாம உள்ளே வாயேன்.''

''ஆமாம், எப்போதும் நான்தான் விட்டுக் குடுக்கணும்! அவன் ஜெயிச்சிண்டே இருக்கணும்! இதோ, நாளைக்கு மன்னி வரப்போறாளே, அவ தில்லுன்னு நின்னு, 'உட்காரு'ன்னா உட்கார்ந்து இவன் ஆடற ஆட்டத்தை நானும் பார்க்கத்தானே போறேன். வரப்போறவ சாமான்யப் பட்டவளா? ஊரே அதிசயிக்கிற அழகு. 'கிராஜுவேட்' வேறே! கையில சாட்டையைச் சொடுக்கிண்டு இவனை ஆட்டி வைக்கப்போறா!''

தனக்கு அழகும் இல்லை, படிப்பும் குறைவு என்ற பொறாமை அவன் நாவைச் சாட்டையாகச் சுழற்றி யடிக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு அவன் பேசாமல் போயிருக்கலாம். பிறவிக் குணமான மூர்க்கத்தனம் அப்படிப் போக விடவில்லை.

''ஏ மீனு. கேட்டுக்கோ. நான் என்னிக்கும், யாருக்கும், எதுக்காகவும் குழைஞ்சு பணிஞ்சு போகப் போறதில்லே. தோத்துப் போறதுங்கறது என் ஜன்மத்திலே நடக்காது.'' குமுறினான்.

இரவின் தனிமையில் கூட மனைவியிடம் நெகிழ்ந்து பழக முடியாமல் மனத்தில் எப்போதும் ஒரு குறுகுறுப்பு. இளமை வேகத்தில் அவள் உறவை நாடிய சமயங்களிலும் குற்றம் புரிவது போன்றதோர் உணர்வு முரட்டுத்தனமாகவே நடந்து கொள்ள வைத்தது.

அவள் அவனிடம் அதிகம் நெருங்காமலே நின்றுவிட்டதும் அதனால்தானோ? அதிலும் ஜகன் பிறந்த பிறகு, ''இரவில் குழந்தை விழித்துக் கொண்டு அழுகிறான். விளக்கைப் போட்டுக்கொண்டு பால் கரைத்துத் தர வேண்டியிருக்கிறது. அவருடைய தூக்கம் கெடும்'' என்று ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லியபடி தனியறையில் படுக்கத் தொடங்கிவிட்டாள்.

'என்னை நீ ஜெயிக்க முடியாது' என்று கேலி செய்வது போல் அவள் அதரங்களில் எப்போதும் தொக்கி நிற்கும் புன்னகையைப் பார்க்கும்போது இவருக்கு எரிச்சல் கூட ஏற்படும்.

இப்படி அனாவசியமான எரிச்சலையும் எதிர்ப்புணர்வையும் வளர்த்துக் கொண்டு, இயற்கையான உணர்ச்சிகளையும், வேட்கைகளையும் மாய்த்துக் கொண்டு மனைவியுடன் ஒட்டாமலே போலி வாழ்வு வாழ்ந்ததால் கண்ட பலன் என்ன? 'நான் என் மனைவியிடம் தோற்கவில்லை' என்று மீனுவுக்கு நிரூபித்ததா? அதற்குத்தான் இப்போது இன்னொரு சவாலை வீசியிருக்கிறாளோ?

''மீனுவுக்கு என்ன எழுதப் போறேன்?''

''ஏன், 'விமலாவை ஜகனுக்குப் பண்ணிக்கிறதிலே எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லே. நீ கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணு'ன்னு எழுதப் போறேன். வேறே என்ன எழுதணும்?''

''ஜகனை ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா?''

''அவனை என்ன கேள்வி? நாம அவனுக்குத் தப்பா எதுவும் செய்துடுவோமா?''

''அப்படி இல்லே. விவரம் தெரிஞ்ச பிள்ளை. படித்து உத்தியோகம் பார்த்துண்டு வெளியூர்ல இருக்கான். அவன் மனசிலே என்ன இருக்குன்னு தெரிஞ்சுக்காம நாம எதுவும் செய்யக் கூடாது. பின்னாலே அவன் வாழ்வும் அந்தப் பெண்ணின் வாழ்வும் பாழாகக் கூடாதில்லையா?''

அவள் சாதாரணமாகத்தான் பேசினாள். ஆனால் அந்த வார்த்தைகள் சாட்டைகளாய்த் தாக்கின. பதில் கூறாமல் எழுந்தார்.

''மன்னி பேச்சைத் தட்ட உனக்குத் தைரியம் இல்லேன்னு; சும்மா பிள்ளை மேலே பழியைப் போடறே!'' என்று மீனு ஏசத்தான் போகிறாள்!

நடையை எட்டிப் போடுகிறார்.

வாசல் திண்ணையில் ஜகனின் மிதியடிகளைப் பார்த்ததும் திடுக்கிட்டு நிற்கிறார். உள்ளே பேச்சுக் குரல்! பஸ்ஸரை அழுத்த எழுந்த கை தானாகக் கீழே இறங்குகிறது.

''நீ நேரிலே வந்ததிலே எனக்கு ரொம்ப திருப்தி ஜகன். இப்போ சொல்லு; உன் மனசிலே யாரை வைச்சிருக்கே? ப்ரியாவையா, விமலாவையா? அல்லது வேற யாரையாவது....?''

''உன் விருப்பப்படி நடக்கிறதுன்னு முடிவு பண்ணிட்டேன்.''

''அப்படின்னா விமலாவையே கல்யாணம் செய்துக்கோ.''

அதிர்ச்சியில் கீழே விழுந்து விடாமல் இருப்பதற்காகச் சாம்பசிவம் சுவரைப் பிடித்துக்கொள்கிறார். 'வெற்றி!' 'வெற்றி!' என்று அவர் மனம் எக்களிக்கிறது.

ஜகனுக்கு அதிர்ச்சிதான் என்பதைக் குரல் காட்டுகிறது.

''நீ ஏன் இந்த முடிவுக்கு வந்தே? அப்பாவுக்கோ அத்தைக்கோ பயப்படறியா?''

சாந்தா ஏளனமாகச் சிரிக்கிறாள்.

''நான் யாருக்குப் பயப்படணும்? யார் கோபம் என்னை என்ன செய்துவிட முடியும்?''

''பின்னே ஏன் இப்படி முடிவெடுத்தே? நீ அவருக்குப் பயந்து பணிஞ்சு போறதாத் தானே அப்பா நினைப்பார்?''

''அவர் என்ன நினைச்சா எனக்கென்ன? எனக்கு உன் மனசுதான் முக்கியம். நீ இந்த முடிவை ஏத்துக்கறயா இல்லையா?''

''முழு மனசோட ஏத்துக்கறேன். ஆனா, அம்மா, நீ இப்படித் தீர்மானம் பண்ணினதுக்கு ஏதாவது முக்கியமான காரணம்

போலீஸ்காரர்: நான் நிறுத்தச் சொல்லி விசில் அடிச்சும், நிறுத்தாம ஏன் காரை ஓட்டிக்கிட்டுப் போனீங்க?''

அவர்: மன்னிச்சுக்குங்க. எனக்குக் காது அவ்வளவாக் கேட்காது!

போலீஸ்காரர்: கவலைப் படாதீங்க. நாளைக்குக் காலையிலே உங்களுக்கு 'ஹியரிங்' இருக்கும்!

-ஆர். எஸ். சுப்பிரமணியம்



# கோத்ரெஜ் ஸ்டோர்வெல் —
# ஆயுட்கால அன்பளிப்பு !



கோத்ரெஜ் ஸ்டோர்வெல், எந்த சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற அருமையான அன்பளிப்பு. ஆயுட்காலம் முழுவதும் நினைவில் நிற்கும் அன்பு பரிசு. வழக்கமான மற்ற ஸ்டீல் அல்லது மர அலமாரிகளோடு ஒப்பிடும்போது, இந்தப் பயன் மிக்க, கவர்ச்சியான, ஸ்டீல் அலமாரி தனக்கே உரிய, நீடித்த உழைப்பாற்றல் மற்றும் கூடுதல் பாதுகாப்பு போன்ற, நலநயங்களைக் கொண்டது.

கோத்ரெஜிடம் மட்டுமே உள்ள வண்ணப் பூச்சு முறை காரணமாக, கீறல் விழாத மேம்பட்ட மெருகு, இதன் அழகிற்கு மேலும் பொலிவூட்டுகிறது.

தவிரவும் முழுநீள 137 செ.மீ. வெளிநாட்டு 'ப்ளேட்' கண்ணாடி, தகர்க்க முடியாத பூட்டுகள், மறைவான கீல்கள், இறுக மூடிக்கொள்ளும் மும்முனைப் பூட்டு மற்றும் அட்ஜஸ்ட் செய்யக்கூடிய ஷெல்ப்புகள்.

இத்தனைச் சிறப்புகளாலும் கோத்ரெஜ் ஸ்டோர்வெல் மறக்க முடியாத, பல தலைமுறைகளுக்கு உழைக்கும் அன்பளிப்பாக அமைகிறது.

**கோத்ரெஜ்** *Godrej*®

**மேம்பட்ட தொழில்—**
**நுட்பம் மற்றும் மதிப்பு.**

ULKA-GS-2-82 TAM

இருக்கணும்னு தோணறது. எங்கிட்டச் சொல்லக் கூடாதா?''

''உங்கிட்டச் சொல்றதிலே என்னடா தப்பு? சொல்றேன்... நானும் அப்பாவும் எத்தனை லட்சணமாத் தாம்பத்தியம் நடத்தறோம்கிறதுதான் உனக்கே தெரியுமே!...''

''தெரியாமலென்ன? அது இன்றுவரை எனக்குப் புரியாத புதிரம்மா. இதுக்கு அப்பாவின் சுபாவம் மட்டும்தான் காரணமா? வேறே காரணமும் உண்டா?''

பிள்ளை பெரிய கேள்வியாகக் கேட்டு விட்டான். அவள் என்ன பதில் சொல்வாள்? உன் அத்தை மீனுதான் காரணம் என்று கூறலாமா? அப்படிசொல்வது சரியாகுமா?...

''ஏம்மா, அன்னு மன்னியை எங்கேயும் கூட்டிண்டு போறதில்லையா? இருந்தாலும் மன்னிக்குச் சமர்த்துப் போறுதும்மா!''

''போறுண்டி. உன் திருவாயை மூடு. எல்லாம் உன்னால வந்த வினைதான். கல்யாணத்துக்கு முன்னாலேயே உன் சனி நாக்காலே அவனை வம்புக்கிழுத்துட்டு இப்போ அவளைக் குத்தம் சொல்றயா?''

''ஐயோ! நான் என்னம்மா சொல்லிட்டேன்? உன் நாட்டுப் பொண்ணுக்கு நாலு தினுசா டிரெஸ் பண்ணிண்டு நாகரிகமா நடந்து அகமுடையானை வசத்திலே வச்சுக்கத் தெரியல்லேன்னு. அதுக்கு நான் பிணையா? என் மேலே ஏன் பாயறே?''

அந்த மீனுவின் பெண்ணையே மணந்து கொள்ளப் போகும் மகனிடம் எதைச் சொல்ல முடியும்? அத்தையின் மேல் ஏற்படும் ஆத்திரத்துக்கு விமலாவை . வடிகாலாக்கி விட்டால் என்ன செய்வது? தாயின் தவறுக்குப் பெண் தண்டனையை அனுபவிக்க வேண்டுமா?

''ஏம்மா பேசாம இருக்கே? அப்பா ஏன் இப்படி இருக்கார்?''

''உன் அப்பாவின் சுபாவமே இதுதான். தாம்பத்தியம் என்பது இரண்டு ஆத்மாக்களை ஒன்று சேர்க்கிற புனிதமான உறவு என்ற உண்மையைப் புரிஞ்சுக்க முடியாம அது ஒரு போட்டிப் பந்தயம், பலப் பரீட்சை என்று அவர் நெனைச்சுட்டார். தோல்விக்குப் பயந்து கோதாவிலேயே இறங்காத பேர்வழிதான் ஜெயிச்சுட்டதாக நெனைச்சுக்கிற மாதிரி உன் அப்பாவும் தான் ஜெயிச்சதா நெனைச்சுண்டிருக்கார். உன் கல்யாணத்தைப் பத்திப் பேசற இந்த வேளையில உனக்கும் சொல்லி வைக்கிறேன். வறட்டு அதிகாரம் ஒரு நாளும் ஜயமாகாது. தன்னோட அன்பாலேயும் பண்பாலேயும் மனைவி மனசு முழுசையும் ஆக்ரமிச்சு, அவ எப்போதும் 'பகவானே! இனி எடுக்கப் போகும் ஜன்மம் எல்லாத்திலேயும் இவரே எனக்குக் கணவரா வரணும்'னு பிரார்த்திக்கிறமாதிரி நடந்துக்கறதுதான் உண்மையான ஜெயம்.''

''நான் அப்பாவைப் போல் முட்டாள்தனமா நடந்துக்கமாட்டேம்மா. அது சரி, அதுக்கும் நீ செஞ்சிருக்கிற முடிவுக்கும்...''

''சம்பந்தம் இருக்குடா. அடுத்த மாசம் உன் அப்பா ரிடையர் ஆயிடுவார். நான் முழுக்க வேலை செய்து பழகினவர் புஸ்தகம் படிச்சும், தூங்கியும் எத்தனை பொழுதைக்




கழிக்க முடியும்? இத்தனை வருஷமும் ஊமையாக்கி வைக்கப் பட்டிருக்கிற நான் திடீர்னு அவருக்குப் பேச்சுத் துணையாக முடியுமா? என்னிக்கும் நான் விலகித்தான் நிற்க முடியும். அவருடைய மனசுக்குப் பிடிச்ச மாட்டுப் பெண்ணு அமைஞ்சா அவளோட பேசறதிலேயும், பழகறதிலேயும் அவர் பொழுது சந்தோஷமாகக் கழியும் இல்லையா?''

''உன்னைப் புரிஞ்சுக்கறது கஷ்டம்மா. இத்தனை நாள் உன்னைத் தவிக்க வைத்தவர் தனிமைங்கறதை நன்னு உணரட்டும்னு அவரைப் பழிவாங்கறதை விட்டுட்டு அவருக்குப் பேச்சுத் துணையைத் தேட முனையறயே!''

''அவரைப் பழி வாங்கறதிலே எனக்கென்ன லாபம் ஜெகன்? சர்வேச்வரனையும், அம்பாளையும் தினமும் பூஜை செய்து, 'நீங்க நெத்தியிலே இருக்கிற நெருப்பாலே என் அகம்பாவத்தை அழிச்சு என்னைக் காப்பாத்துங்கோன்னு பிரார்த்திக்கிற நான் என் மனச்சாட்சிக்கு விரோதமா நடந்து உன் அப்பாவைப் பழி வாங்கினு அது என் அகம்பாவத்துக்குக் கிடைக்கிற வெற்றியாகுமே தவிர ஆத்மாவுக்குக் கிடைக்கிற வெற்றியாகுமா?''

சம்மட்டியால் தாக்கப்பட்டவரைப் போல் சாம்பசிவம் விதிர் விதிர்த்து நிற்கிறார். நடுங்கும் கரம் பல்லவரை நோக்கி உயர்கிறது.

# துள்ளத்தில் துள்ளியவர்

திரு வி. க. பெயரில் உள்ள 'திரு'வை வைத்து, அவர் பிறந்தது திருவாரூர் என்று பெரும்பான்மையோர் தவருக எண்ணிக் கொண்டிருக்கிருர்கள். திருவாரூர் அவருடைய மூதாதையர்கள் ஊர். திரு. வி. க. பிறந்தது, செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள 'துள்ளம்' கிராமம்.

'துள்ளம்' என்கிற இந்த ஊரைத் தேடிக் கண்டுபிடிக்க முயலுவது ஒரு 'கொலம்பஸ்' சாதனை! ஏனெனில் தற்போது அது தன் பெயரைத் 'துண்டலம்' என்றும், 'தண்டலம்' என்றும் பாடபேதமாக உச்சரித்துக் கொண்டிருக்கிறது!

தாம் பிறந்த ஊரின் பெயருக்கு இப்படி ஒரு விபத்து நேரும் என்பதை முன்கூட்டியே அறிந்த தீர்க்கதரிசி திரு வி. க. தமது வாழ்க்கை வரலாற்றில் துள்ளத்தின் இருப்பிடத்தைப் புவியியல் ரீதியில் படம் பிடித்துக் காட்டியிருக்கிருர்:

,சைதாப்பேட்டை தாலுகாவில் நூம்பலுக்கும் செட்டியாவரத்துக்கும் நடுவில் உள்ளது.' தமது வீடு இருக்கும் இடத்தையும் வர்ணித்திருக்கிருர்:

'கண்ணன் கோயிலுக்கு அருகே, ரங்கசாமிப் பிள்ளையின் நிலத்தில்...'

சுற்றிப் பார்க்கிருேம். பாழடைந்த குளம். சிதிலமடைந்த கோயில்... வீடு இருந்த இடத்தில் மண் மேடு.

'தமிழ்த் தென்ற'லுக்குத் தடையமே இல்லாதது கண்டு மனத்தில் வேதனைப் புயல் வீசுகிறது.

'இலக்கிய வீதி', திரு. வி. க.வுக்கு வித்தியாசமான கோணத்தில் தன் ஆத்மார்த்தமான பணியைச் செய்தது. செம்மல் பிறந்த ஊரைச் சிறப்பிக்க முன் வந்தது. இனியவன் இலட்சிய வேட்கையோடு புறப்பட இலக்கிய வீதி அண்மையில் துள்ளத்திற்கே சென்று திரு வி.க. நூற்றியோராம் ஆண்டு விழாவைக் கொண்டாடியது. இதைக் காணக் கிராமமே அணி திரண்டது.

சிறப்புரையாற்றிய சிலம்பொலி செல்லப்பன், திரு. வி. க. துள்ளத்தில் எட்டு வயது வரையில் துள்ளித் திரிந்த பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளைக் கோவைப் படுத்தினர். அவர் மிகவும் வேதனையோடு குறிப்பிட்ட ஒரு செய்தி:

'சமீபத்தில் தொலைக் காட்சியில் 'குவிஸ்' நிகழ்ச்சி ஒன்று நடத்தப்பட்டது. தமிழ் நாட்டுக் கல்லூரி மாணவர்கள், ஆஸ்திரேலியாவில் பாயும் நதிகளை, எங்கோ ஒரு மூலையில் ஏதோ ஒரு நாட்டில் உள்ள நடிகையின் பெயரைத் தாமதமில்லாமல் சொன்ஞர்கள். 'தமிழ்த் தென்றல் யார்?' என்ற கேள்விக்கு மட்டும் பதிலில்லை!'

விழாவில் கலந்து கொண்டவர்கள் துள்ளத்தில் திரு. வி. க. வுக்கு நினைவு மண்டபம் அமைக்க முயற்சி எடுக்க வேண்டும் என்று வலியுறுத்தினர். துண்டலம் கிராமப் பிரமுகர் ஆதிநாராயணன், மண்டபம் கட்டத் தமது ஒரு கிரவுண்ட் மனையை இலவசமாக வழங்குவதாக அறிவித்திருக்கிருர். தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் சிலம்பொலி செல்லப்பன் அரசுக்குப் பரிந்துரை செய்ய வாக்களித்திருக்கிருர்...

'இலக்கிய வீதி'யின் முயற்சிக்குத் தமிழகம் கை கொடுக்குமா?

— துரை சீனிவாசன்

⌘ இனியவன் பேச மையத்தில் சிலம்பொலி செல்லப்பன்



## கைதிகள் விமானம்

அமெரிக்காவில் ரான் வியோஹுர்ட் என்பவர் ஒரு விமான சர்வீஸ் நடத்துகிறார். யாருக்கு? சிறைக் கைதிகளுக்கு!

கைதிகள் ஒரு சிறையிலிருந்து இன்னொரு சிறைக்கு மாற்றலாகிப் போகும்போது போலீஸுக்கு உதவுகிறார் வியோஹுர்ட். இதற்கெனப் பதினெட்டு மாதங்களுக்கு முன் ஒரு நிறுவனத்தைத் தொடங்கி சென்ற ஆண்டில் 10 லட்சம் டாலர் சம்பாதித்தார்! இவரிடம் ஆறு விமானங்கள் உள்ளன. ஒவ்வொன்றிலும் ஆறு முதல் எட்டுப் பயணிகள் செல்ல முடியும். பதினைந்து பைலட்டுகளைத் தவிர பல காவலர்களையும் வேலைக்கு அமர்த்தியுள்ளார். ஏனெனில் கைதிகள் தப்பிவிடாமல் கவனித்துக்கொள்ளும் பொறுப்பையும் வியோஹுர்ட் ஏற்றுக்கொள்கிறார். அவர்களை அன்பாகவும் நடத்துகிறார். கைதிகளில் பலர் பயணத்தின்போது தங்களை நன்றாக உபசரித்ததற்காக நன்றி கூறிக் கடிதம் எழுதுகிறார்கள்!

—நன்றி: நியூஸ் வீக்






## ஆட்டின் மீது வழக்கு!

ரட்லம் நகரில் ஓர் ஆதிவாசி ஒரு வெள்ளாட்டின் மீது கோர்ட்டில் வழக்குத்தொடுத்திருக்கிறார்!

ஒரு மில்லில் வேலை பார்க்கும் அவர் சம்பளத்தை வாங்கிக் கொண்டு வீடு திரும்பும்போது ஒரு வெள்ளாடு அவர் மீது பாய்ந்து சம்பளக் கவரைக் கடித்துத் தின்றுவிட்டது. இதனால் ஆதிவாசிக்கு நஷ்டம்: ரூ. 75.

—ரமேஷ்—சுரண்ட்



## இருபதாண்டுத் தூக்கம்!

சென்னைப் பல்கலைக் கழகம் தனது நூற்றாண்டு கடந்த வெள்ளிவிழாவை முன்னிட்டுப் பல்வேறு துறைகளின் கீழ் கருத்தரங்கங்கள் நடத்தியது. ஒரு கருத்தரங்கில் எல்லோரையும் கவர்ந்த கட்டுரை திருமதி சியாமளா பாலகிருஷ்ணன் படித்த 'நாட்டுப் பாடல்கள்' பற்றிய ஆய்வுக் கட்டுரை.

அவர் பேசி அமர்ந்ததும் நிகழ்ச்சிக்குத் தலைமைப் பொறுப்பில் இருந்த திரு டி.வி. நாராயணசாமி (தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றச் செயலாளர்) இந்த அற்புதமான கட்டுரை விரிவாக்கப்பட்டு நூல்வடிவில் வெளிவரத் தமது அமைப்பு ஆவன செய்யும் என்றார். சியாமளா உடனடியாக எழுந்து வெடிகுண்டு ஒன்றைப் போட்டார். "ஏற்கெனவே இருபது ஆண்டுகளுக்கு முன்பாக நான் அனுப்பிய ஆய்வு ஒன்று நூல் வடிவம் பெறாமல் உங்கள் மன்றத்தில் தூங்கிக்கொண்டிருக்கிறது" என்று பகிரங்கப்படுத்தினார். நிதி நிலைமை பற்றிக் குறிப்பிட்டு நாராயணசாமி சமாளித்தார்.

--எஸ். வாணிசங்கர்



# நம்நாட்டிலே நடக்குதையா!

## வீரன் முருகன்

மதுரை ஆஸ்பத்திரியில் ''மயோபதி'' எனும் கொடிய நோயால் பாதிக்கப்பட்ட ஒரு 12 வயதுச் சிறுவனின் பெயர் முருகன்.

தனது உடலில் பாகங்கள் சிறிது சிறிதாகச் செயலற்றுப் போவதைக் கண்ணால் கண்ட இவன், தனது நிச்சயமான மரணம் பற்றி, தூரத்தில் டாக்டர்கள் பேசுவதை அவர்களின் உதட்டசைவிலே புரிந்து கொண்டான். மரண பயம் சிறிதும் வெளிக்காட்டாத முருகன் ''பாலைவனச் சோலை'' திரைப் படம் பார்க்க வேண்டும் எனக் கூறினான். டாக்டர் ஒருவர், ''ஏன் குறிப்பிட்ட அந்தப் படத்தைக் காண விரும்புகிறாய்?'' எனக் கேட்ட போது, முருகன், ''அந்தப் படத்திலே ஒரு 18 வயதுப் பொண்ணு சாகிறதை நல்லாக் காட்டுறாங்களாமே. கேள்விப்பட்டேன்; அதனால்தான்'' என்றான். தனி அறையில் அவன் திரைப்படம் காண ஏற்பாடு செய்யப்பட்டது.

சில தினங்களில் முருகன் தன் உடலில் தொடர்ந்த பாதிப்பை உணர்ந்தான். ஆஸ்பத்திரி ஊழியர்களையும் நர்சுகளையும் அழைத்து ''தாங்க்யூ'' கூறினான். தனக்கு வைத்தியம் செய்த டாக்டர்களிடம் சிரித்துக்கொண்டே தன் கைகளைச் சிரமத்துடன் அசைத்து ''குட்பை'' சொல்லி மீளாத் துயில் ஏக விடைபெற்றான்.

—கே. வி. கோபால்





## ஆறாவது பழத்துக்கு அறை!

சமீபத்தில் கருங்கல் ஜங்ஷனில் ஒரு கடை முன் ஒரே கூட்டம்.

நடந்தது.... ஒரு பழக் கடை முன் இருவர் பேசிக் கொண்டு நின்றனர். பேச்சு சுவாரஸ்யத்தில் ஒருவர் பழக் கடையில் உள்ள திராட்சைப் பழங்களை ஒவ்வொன்றாகப் பறித்துப் பறித்து வாயில் கூடப் போடாமல் தூர எறிந்து கொண்டே இருந்திருக்கிறார். ஐந்து பழம் தூர எறிவது வரை கடைக்காரர் பொறுத்தாராம். ஆறாவது பழம் மீது கைவைக்கவும் கடைக்காரர் பழம் பறித்தவரைக் கன்னத்தில் அறைந்து விட்டாராம்! அதுதான் தகராறு!

- கருங்கல் ஆர். ஜார்ஜ்

## தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் தெரியாது!

'நாங்கள் நாலாவது படிக்கிறோம்.' என்றனர் இரு குழந்தைகள். 'நாங்கள் ஐந்தாவது படிக்கிறோம்' என்றார்கள் மூன்று குழந்தைகள். அவர்களிடம் சென்னை வானொலி நிலையத்தில் 'மழலை அமுதம்' நிகழ்ச்சி நடத்துவதற்காகச் சில கதைகள், பாடல்கள், உரையாடல்களை எழுதிக் கொடுத்துப் படிக்கச் சொன்னோம்.

அவர்களில் ஒரு சிறுவன், ''எனக்குத் தமிழ் படிக்க வராது'' என்றான். ஒரு சிறுமி, எழுத்துக் கூட்டித் தட்டுத் தடுமாறிப் படித்தாள். இன்னொரு சிறுவன் தப்பும் தவறுமாகப் படித்தான். ''எங்களுக்குத் தமிழ் தெரியாது. நாங்கள் படிப்பது இங்கிலீஷ் மீடியம் ஸ்கூலில்'' என்றார்கள் அந்தத் தமிழ்க் குழந்தைகள்!

பள்ளியில் ஆங்கிலம் பயிற்சி மொழியாக இருந்தாலும், பெற்றோர்கள் தங்கள் வீட்டிலாவது தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் கற்றுக்கொடுக்கக் கூடாதா?

—வ. தேவி,
அமைப்பாளர், கவிமணி குழந்தைகள் சங்கம், சென்னை-40



# அழகிய பிரான் செய்த அற்புதம்

ஆனந்தி

**சா**தாரண சமையல் உப்பைப் பற்றி விஞ்ஞானப் பாடம் படிக்கும் சிறுவனைக் கேட்டுப் பார்த்தால் என்னென்னமோ சொல்கிறான். நமக்குத் தெரிந்தது உப்புக் கரிக்கிறது. ஊறுகாயில் ருசிக்கிறது. ரசத்தில் உப்பில்லாவிட்டால் அசடு வழிகிறது. (முகத்தில்—ரசத்தில் அல்ல!)

இப்படி ரஸவாத வித்தைகள் புரியும் இறைவன் ஒரு பெண்ணுக்காகச் செம்பைப் பொன்னாக்கித் தந்தாராம். திருவிளையாடல் புராணத்தில் சிவபெருமான் ரஸவாத வித்தை செய்து ஒரு கணிகையின் ஆசையை நிறைவேற்றியதாக ஒரு கதை. அந்தக் கதையுடன் தொடர்புடையது திருபுவனம் என்று அழைக்கப்படும் திருப்பூவணம். வைகை நதிக்கரையில் மதுரையிலிருந்து சுமார் 20 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது இத்தலம்.

பொன்னனையாள் என்று ஒரு பெண். தினமும் ஈசனைத் தியானம் செய்து, அர்ச்சனை முடித்துக் கை குவித்துப் பூவணத்துப் புனிதனுரைச் சேவிக்க, அவர் சந்நிதியின் முன்பு சுத்த நிருத்தம் செய்து வழிபட்டு வந்தாள். சிவனடியார்களிடம் மிகுந்த பக்தியுடையவள். இறைவனுடைய திருமேனி அழகைக் கற்பனைக் கண்களால் கண்டு மகிழ்வாள். சொக்கத் தங்கத்தினால் சொக்கரைச் சிலையாக வடிக்க வேண்டும் என்று அவளுக்கு ஆசை. அவ்வளவு பொன்னுக்கு அவள் எங்கே போவாள்? இது ஒரு ஏக்கமாகவே ஆகிவிட்டது அவளுக்கு. பொன்னனையாளின் ஆசையை நிறைவேற்ற ஈசன் சித்தராக வந்தார். அவருக்கு அமுது படைத்துத் தன் அபிலாஷையைக் கூறினாள் அவள். வீட்டிலுள்ள எல்லாப் பாத்திரம் பண்டங்களையும் கொண்டு வரச் சொன்னார் சித்தர். அந்தக் காலத்தில் எவர்சில்வர் பாத்திரங்கள் இருந்திருக்காது. ஆகவே பொன்னனையாள் ஈயம். பித்தளை செம்புப் பாத்திரங்களைக் கொண்டு வந்தாள். எல்லாவற்றையும் உருக்கிப் பொன்னாக்கி விட்டு மறைந்து விட்டார் சித்தர்.

தன்னுடைய ஆசை நிறைவேறியபோது, பொன்னார் மேனியன் அழகு பிம்பமாகத் தோன்றியபோது பொன்னனையாளின் நெஞ்சம் எப்படி விம்மிப் பூரித்திருக்கும்! பரவசமடைந்த பொன்னனையாள் ''அச்சோ அழகியபிரானே!'' என்று கன்னத்தைக்கிள்ளி முத்தமிட்டாளாம். இது திருவிளையாடற் புராணத்தில் வரும் கதை.

அள்ளிமுத்தங் கொள்ளுமவள் அன்புபார்—
வெள்ளி வெற்பன்
அன்புக் கிளகியவன் அங்கை நகரேகை
தன்பொற் கபோலந் தரித்தது பார்!

என்று திருப்பூவண நாதருலாவில் பொன்மேனிப் பிரான் வருணிக்கப்படுகிறார்.

ஸோமாஸ்கந்தரான இந்தப் படிவத்துக்கு வடமொழிப் பெயர் ஸௌந்தர நாயகர். தங்கமோ வெண்கலமோ! அருகில் சென்று பார்க்க முடியவில்லை. கதவு பூட்டியிருந்தது. எந்த உலோகமாக இருந்தால் என்ன? ஓர் அடியாளின் ஆசையை நிறைவேற்றி அருள்புரிந்த எளிமை மனத்தைக் கவர்கிறது. மகிழ்ச்சிக் களிப்பில் திளைத்து இன்னது செய்கிறோம் என்று தெரியாமல் ஈசனுடைய கன்னத்தைக் கிள்ளிய பக்தியின் எக்களிப்பு உவகை தருகிறது.

மூவர் பாடல் பெற்ற தலம். கருவூர்த் தேவர் பாடிப் பரவிய தலம்.

'சிவகாமியின் சபதம்' படித்தவர்களுக்கு இந்தத் தலம் நிச்சயம் ஞாபகம் இருக்கும். திருநாவுக்கரசர் பெருமான் முந்நிலையில் அபிநயம் செய்ய நிற்கிறாள் சிவகாமி.

⌘ சற்றுத் தூக்கிய முகத்துடன் விலங்கிருக்கும் நந்தி

⌘ அச்சோ! அழகிய பிரானே!







பொற்படிவம் செய்வித்த பொன்னனையாள்

ஆயனர் ''பூவணத்துப் புனிதனார் தோன்றட்டுமே!'' என்று கூறுகிறார்.

வடிவேறு திரிசூலம்
        தோன்றும்தோன் றும்
வளர்சடைமேல் இளமதியம்
        தோன்றும்தோன் றும்
கடியேறு கமழ்கொன்றைக்
        கண்ணிதோன் றும்
காதில் வெண் குழைதோடு
                கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப்
        போர்வைதோன் றும்
எழில்திகழும் திருமுடியும்
        இலங்கித்தோன் றும்
பொடியேறு திருமேனி
        பொலிந்துதோன் றும்
பொழில்திகழும் பூவணத்தெம்
        புனிதனார்க் கே!

என்ற பாடலுக்குச் சிவகாமி அபிநயம் பிடிக்கிறாள்.

இந்தத் திருத்தாண்டகம் பூவணத்துப் புனிதனாரின் சந்நிதியில் நிற்கும்போது நெஞ்சை நிறைத்தது. இன்னொரு அதிசயம் என்னவென்றால் புனிதனாருடைய திருமேனியில் திரிசூலம் உண்மையாகவே தோன்றுவதுதான். பாலபிஷேகம் செய்யும்போது இந்தத் திரிசூலம் பளிச்சென்று தெரிகிறது. இங்கு நின்றுகொண்டு இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டேதான் அப்பர் பெருமான் பாடினாரோ என்று எண்ணுகிறோம்.

தீபாராதனை முடிந்து பிரஸாதம் பெற்றுக் கொண்டு புஷ்பவனேசரை வலம் வந்து நடராஜ மூர்த்தியின் சந்நிதியில் நிற்கிறோம். அழகான கற்படிவம். பிரும்மா காண்பதற்காகத் தாண்டவமாடிய தலம் இது. ஆதலால் பிரும்ம தாண்டவேச்வரர் என்று திருநாமம்.

இந்தக் கோவிலுக்கு மணி கர்ணிகை தீர்த்தம் என்பதாக ஒரு குளம் இருந்தது. அது இப்போது தூர்ந்து போய் இருக்கிறது. இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தபடியால்தான் அகத்திய முனிவர் கடல் நீரைப் பருகும் வன்மை பெற்றாராம்.

ரஸவாத வித்தை செய்த சித்தர்



சூரிய பகவான் பூஜித்ததால் பாஸ்கர க்ஷேத்திரம் என்று ஒரு பெயர். பாஸ்கர விமானம்.

கந்தசாமிப் புலவர் இயற்றிய திருப்பூவணப் புராணம், திருப்பூவண நாதருலா என்ற இலக்கியங்கள் இருக்கின்றன. மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் திருப்பூவண நாதருலாவைப் பதிப்பித்திருக்கிறார். இறைவனுக்கு இன்னொரு பெயர் ''அடைவார் வினை தீர்க்குமம்மான்.''

தர்மயக்ஞன் என்பவன் தன் தந்தையின் அஸ்தியைக் காசிக்குக் கொண்டு போகும் போது இந்தத் தலத்துக்கு வந்தான். வைகைப் படித்துறையில் அஸ்தியானது தாமரையும் நீலோற்பலமுமாக மாறியிருந்ததாம். அதனால் புஷ்பவனக் காசி என்று பெயர் பெற்றது இந்த ஊர். காசிக்குப் போக முடியாதவர்கள் இந்த இடத்தில் வைகையில் அஸ்தியைக் கரைத்து மோக்ஷ தீபம் போடுகிறார்கள். சுவாமிக்குப் பின்னால் திருவாசி போல் இருபத்து நான்கு நெய் விளக்கு ஏற்றுவது மோக்ஷ தீபம். ஜோதியாக ஒளி வீசிக் கொண்டு சிவபதம் அடைவதற்கு அடையாளமாக விளக்கு ஏற்றப்படுகிறது.

இந்த விவரங்களையெல்லாம் எடுத்துக் கூறிய புஷ்பவனப் பட்டர், இளைஞர். இவருடைய தந்தையாரும் கோவில் அர்ச்சகராகப் பணி செய்து வருகிறார். கோவிலின் சிறப்புக்களையும், தல புராணக் கதைகளையும் மிக நன்றாக எடுத்துச் சொன்னார். புஷ்பவனப் பட்டர். கோவிலைப் பற்றிப் பெருமிதத்துடன் விளக்குகிறார். தூண்களிலுள்ள சிற்பங்களையெல்லாம் காட்டி விளக்கம் கூறினார்.

பல ஆண்டுகளுக்கு முன் கல்கி பத்திரிகையிலேயே இந்தத் தலத்தைப் பற்றி திரு பாஸ்கரத் தொண்டைமான் எழுதியிருப்பதை நினைவுகூர்ந்தார்.

அம்பிகையின் கோவிலுக்குச் செல்கிறோம். அம்பாள் பெயர் சௌந்தர்ய நாயகி. அழகிய மீனாள் என்று புஷ்பவனப் பட்டர் கூறினார். மின்னம்மை, மின்னனையாள் என்பது தேவாரத்தில் சூட்டப்பட்ட பெயர்.

தேவி பத்ம பீடத்தில் நிற்கிறாள். திரிபங்கி நிலையில் அழகுக் கொடியாகவே தரிசனம் தருகிறாள்.

இந்த ஊருக்குச் சம்பந்தர் பெருமான் வந்தபோது நந்தி சற்று விலகியதாகவும் அப்பாலிருந்தே சம்பந்தர் பெருமான் பதிகம் பாடியதாகவும் கூறுகிறார்கள். சற்றுத் தூக்கிய முகத்துடன் சந்நிதியிலிருந்து சற்று விலகியே காணப்படுகிறார் நந்திகேசுவரர்.

வெந்துய ருறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தியை யடிதொழ நன்மை யாகுமே.

—ஞானசம்பந்தர்

(நந்தி – சிவபெருமான்)

புகைப்படங்கள்: **என். ராமகிருஷ்ணா**

## அருள்வாக்கு

சாக்ஷாத் பராசக்தியைக் காத்யாயனியாகவும் மகாலக்ஷ்மியை பார்கவியாகவும் குழந்தைகளாக்கி அந்த பாவத்திலேயே வழிபட்டால் நமக்கும் குழந்தைத் தன்மை சாக்ஷாத்கரித்துவிடும். இந்த நாளில் வாட்டர் ப்ரூஃப் என்று சொல்வது போல் நாம் காம ப்ரூஃப், குரோத ப்ரூஃப், சோக ப்ரூஃப் எல்லாமாக, சாந்தமாக ஆவோம். குழந்தை ரூபத்தில் இருந்தாலும் ஞானப் பால் ஊட்டும் ஸ்ரீ மாதாவாக இருக்கிற தேவி நமக்கு இந்த அநுக்கிரகத்தைச் செய்வாள்.

குழந்தையாக வந்த காத்யாயனியைத் தமிழ்நாட்டுக் கிராம ஜனங்கள் கூட நீண்ட காலமாக வழிபட்டு வந்திருக்கிறார்கள் என்பது என் ஊகம். 'காத்தாயி' என்று சொல்கிற கிராம தேவதை 'காத்யாயனி'தான் என்று நினைக்கிறேன்.

'பட்டாரிகை' என்று பெரிய ஸ்ரீவித்யோபாசகர்கள் குறிப்பிடும் அம்பாளைத்தான் நம் கிராம மக்கள் 'பிடாரி' என்று சொல்லிப் பூஜிக்கிறார்கள். பழைய செப்பேடுகளில் 'பட்டாரிகா மான்யம்' என்பதை 'பிடாரி மான்யம்' என்று திரித்துக் குறிப்பிடுவதிலிருந்து இதை உணரலாம்.

இவ்வாறே நம் கிராம ஜனங்களும் கூட சரஸ்வதியை நீண்ட காலமாக வழிபட்டிருக்கிறார்கள். 'பேச்சாயி பேச்சாயி' என்று சொல்கிற கிராமதேவதை பேச்சுக்கு ஆயியான வாக் தேவி சரஸ்வதியைத்தான் குறிப்பிடுகிறது.

அம்பாளையும் மகா லக்ஷ்மியையும் சரஸ்வதி தேவியையும் பூஜித்து எல்லாரும் சக்தியும் சம்பத்தும் நல்ல புத்தியும் பெறுவோமாக.

**— ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**



# மாறுதல் வரும்

## சுஜாதா

**பகுதி 4**

## "கிருஷ்ணா! கிருஷ்ணா!"

கிருஷ்ணா ராவுக்குத் தெரிந்த ஒரே காரியம் நல்ல மரத்தில் அழகழகான கிருஷ்ணர் வடிவங்களைச் செதுக்குவதுதான். தொழிலகத்தை நவீனப்படுத்தி அயல்நாட்டு ஆர்டர்களைப் பூர்த்தி செய்ய எண்ணும் முதலாளி பிரகாஷ், கிருஷ்ணா ராவை ரிடையராகச் சொல்கிறான். பெரிய குடும்பஸ்தரான அவர் கெஞ்சுகிறார். பிரகாஷ் மசியவில்லை. கிருஷ்ணா ராவ் தொழிற்சங்கத் தலைவர் ராஜசேகரனை அணுகுகிறார். ராஜசேகர் முதலாளியிடம் தான் வாதாடுவதாகக் கூறியதோடு கிருஷ்ணா ராவின் பெண்ணுக்கு யூனியன் ஆபீஸில் வேலை போட்டுத் தருவதாகவும் அனுப்பி வைக்குமாறும் சொல்கிறான். முதலாளி, ராஜசேகரனுக்கு அயல்நாட்டுப் பாட்டில் சரக்குக் கொடுத்துச் சரிக்கட்டுகிறான். கிருஷ்ணா ராவை வேலையை விட்டு அனுப்பாமல் புதிய இயந்திரத்தில் பணியாற்றப் பழக்குவதாகக் கூறி, இயந்திரம் தருவிக்க ஒப்புதல் பெற்று விடுகிறான். இயந்திரம் நிறுவ வரும் நிபுணர் அதை இயக்க கிருஷ்ணா ராவுக்குச் சொல்லித் தருகிறார். விஞ்ஞான வார்த்தைகளைப் போட்டு மளமளவென்று அவர் போவதும் கிருஷ்ணா ராவுக்குத் தலை சுற்றுகிறது!

பிரகாஷ்: கையால பண்ணிக்கிட்டிருந்த காலமெல்லாம் போயிருச்சு ராவ். மூளை இனிமே இந்த மாதிரி மெஷின்களைச் செய்யறவங்களுக்குத்தான் தேவைப் படுது. இதை இயக்கறதுக்குத் தேவையில்லே. ஒரு குரங்குகூடச் செய்துரும்.

கிருஷ்ணா ராவ்: எனக்கென்னவோ இவர் சொன்னது அத்தனையும் என்னால பண்ண முடியும்னு தோணலே.

பிரகாஷ்: பண்ண முடியும். ஆனா, ஒங்களுக்கு உள்ளுக்குள்ள ஒருவிதமான கல்ச்சரல் ரெஸிஸ்டன்ஸ் இருக்கு.

கிருஷ்ணா ராவ்: அதென்ன ரெஸிஸ்டென்ஸோ! எனக்கு இதைப் பார்த்தாலே பயமா இருக்கு. பொத்தானை அமுக்கு. பச்சை விளக்கு வரும் பாரு. கிருஷ்ணர் வருவார்ங்கறதெல்லாம் கேக்கவே நன்னால்லே. வேற வேலை ஏதாவது குடுங்கோ.

பிரகாஷ்: வேற வேலை இல்லை ஸ்வாமி. அதுக்குத்தான் உங்க கிட்ட சொன்னேன். உங்களால முடியாது, ரிட்டையர் ஆயிடுங்க. உங்களால தாக்குப் பிடிக்க முடியாதுன்னு சொன்னேன். நீங்கதான் யூனியன் ஆசாமி கிட்டப் போய்ப் புகார் கொடுத்துக் கலாட்டாப் பண்ணீங்க. யோசிச்சுப் பாருங்க. உங்களை வேலையை விட்டு நீக்கலே. ஆனா இந்த ஆபரேஷன்ஸ் எல்லாம் செய்தே ஆகணும். அது இல்லாம நடக்கவே நடக்காது.

கிருஷ்ணா ராவ்: அடேயப்பா! என்ன முன்னேற்றம் பார்த்தேளா முதலாளி! இந்தக் கலை, சில்ப சாஸ்திரத்தில இருக்கிற கலை. பதிமூணாவது நூற்றாண்டிலேருந்து வழி வழியா எங்க குடும்பத்தில வந்திருக்கிற

பாகவதர் குரல்: கிருஷ்ணாராவ் எப்படி இருக்கார் பாருங்கோ! சீருடை குரங்குக் குல்லா எல்லாம் போட்டுண்டு ஜம்முனு. மூணு நிமிஷத்துக்கு ஒரு கிருஷ்ணர் அமெரிக்கா போகப் போகிற கிருஷ்ணர்!

புகைப்படங்கள்: ரவீஷ்





முத்து: தாத்தா, வாங்க லஞ்ச் ப்ரேக்கு!
கிருஷ்ணராவ்: (மலைத்து) லஞ்ச் பிரேக்கா என்ன?

கலை. எங்க வீட்டில ஓலைச் சுவடிகள் எல்லாம் இருக்கு. காட்டுக்குப் போய் எப்படி மரத்தைத் தேர்ந்தெடுக்கிறது. எப்படி ஊறப்போடறது. எத்தனை நாள் ஊறப்போடறது. பட்டை உரிக்கறது. அங்க லட்சணங்கள்! கிருஷ்ணரைச் சிரிக்க வைக்கிறதையே எங்கப்பா மணிக்கட்டில தொட்டு தொட்டுன்னு அடிச்ச என்னை அழ வச்சு இருபது வருஷம் எனக்குக் கத்துக் குடுத்தார். இப்ப என்டான்னா மூணு நிமிஷத்துல ஒரு கிருஷ்ணர்! அதுவும் நான் செய்யற மாதிரியே வரும் கறேன்!

பிரகாஷ்: அதைவிட சுத்தமா, அழகா வரும். இப்ப என்ன சொல்றீங்க? எடுத்து இந்த வேலையைச் செய்றீங்களா இல்லியா?

கிருஷ்ணா ராவ் (தீர்மானமாக): வேண்டாம். எனக்கு இந்த மாதிரி ஒரு புராதனமான கலையைக் கொச்சைப்படுத்த விருப்பமில்லை. நான் பாட்டுக்கு வீட்டில உட்கார்ந்துண்டு சுரண்டிண்டு இருக்கேன். யாராவது வாங்கினா வாங்கட்டும். என் பொண்ணுக்கு ராஜசேகர் வேலை வாங்கிக் கொடுக்கறேன்னிருக்கார். பார்க்கலாம். இந்த வயசில என்னால புது வழிகளுக்கு மாத்திக்கமுடியாது. நான் விலகிக்கிறேன்.

பிரகாஷ்: வெலகிக்கிறீங்களா? அப்புறம் நான் வேலை கொடுக்கலைன்னு சொல்லாதீங்க.

கிருஷ்ணா ராவ்: இல்லை. நானாத்தான் விலகிக்கிறேன்.

● ● ●

பாகவதர்: அவருக்கே இஷ்டமில்லாம கிருஷ்ணா ராவ் விலகிண்டுட்டார். வீட்டுக்கு வந்து சந்தோஷத்தோட தன் சம்சாரம் கிட்ட இதைச் சொன்னார். பொண்கள் கிட்டேயும் சொன்னார். இவருக்குத்தான் சந்தோஷமே ஒழிய அவா யாரும் சந்தோஷப்பட்டதாகத் தெரியலை.

● ● ●

மனைவி: என்னமது! இப்பிடிப் பண்ணிண்டு வந்துட்டார்?

துளசி: என்னப்பாது. இவாள்ளாம் படிக்க வேண்டாமா?

கிருஷ்ணா ராவ்: படிக்கட்டும்மா. காவேரியும் ரகோத்தமனும் படிக்கட்டும். மஞ்சுளாவுக்கு வேலை வாங்கித் தரேன்னு ராஜசேகரன் சொல்லியிருக்கார்.

மனைவி: என்னடி மஞ்சுளா இது?

மஞ்சுளா: எந்த ராஜசேகரன் அப்பா?

கிருஷ்ணா ராவ்: யூனியன் செக்ரட்ரியா இருக்காரே....

மஞ்சுளா: அங்க எனக்கு வேலையா? என் படிப்பு என்ன ஆறது? பாதில நிக்கறதா? என்னப்பா, என்ன ஆயிடுத்துன்னு வேலையை விடறேங்கறேன்?

கிருஷ்ணா ராவ்: மெஷின் கொண்டு வந்துட்டாம்மா. அதைப் போய்க் கத்துக்கோன்னு சொல்றான். எனக்கு அது வராதுன்னு தோணறது.

அவருக்கே இஷ்டமில்லாமல் கிருஷ்ணராவ் வேலையை விட்டு விலகியதைச் சொன்னபோது... குடும்பத்தில் யாரும் சந்தோஷப்பட்டதாகத் தெரியவில்லை!



மஞ்சுளா: தோன்றது... முயற்சி பண்ணிப் பார்த்திங்களாப்பா?

கிருஷ்ண ராவ்: இல்லேம்மா. ஆறு, அது எனக்கு வராது.

மஞ்சுளா: முயற்சி பண்ணும எப்படிப்பா சொல்றீங்க?

மனைவி: அது சொன்ன பேச்சைக் கேக்காதுமே. இப்படித்தான் குடுகுடுன்னு போய் ஏதாவது காரியம் பண்ணிட்டு நம்மையெல்லாம் நடுத் தெருவுல நிக்க வெச்சுடும்... ஒங்களுக்குப் பொறுப்புங்கிறது இருக்கா? நாலு கொழந்தைகள். போதாக் குறைக்கு அதுகள்ல ஒருத்திக்கு வயத்துல வேற ஒண்ணு. வீம்பு மட்டும் குறைச்சலில்லே. உங்களை யாராவது வேலையை விட்டுத் துரத்தினுளா? வேண்டாம்னுளா? முதலாளிகுடும்பம்எத்தனை நல்லகுடும்பம்! உங்கப்பா சொன்னுர். போறதுக்கு முந்தி கூடச் சொன்னுரே. ''கிருஷ்ணன் திடீர்னு பைத்தியம் பிடிச்சப் பாலைப் பிராண்டற மாதிரி ஏதாவது செஞ்சுருவாண்டி. நீதான் அவனை வழிக்குக் கொண்டு வரணும்... பொண்ணுப் பெத்துண்டிருக்கே. அதுகளை ஒப்பேத்தறவரைக்கும்சிக்கனமா இருன்னு. இப்ப நான் என்ன செய்வேன்?

துளசி: அப்பா, என்னப்பா இப்படிச் செஞ்சுட்டேள்?

காவேரி: போங்கப்பா. இப்பக்கூட லேட்டில்லே. புது வேலையை ஒத்துக்கங்கப்பா.

துளசி: இவாள்ளாம் படிக்க வேண்டாமா? படிப்பு முடிஞ்சதும் இந்த விஷப் பரீட்சையெல்லாம் பண்ணலாமே?

அம்மா: இவ வயத்திலே வேற குழந்தை.

---

# நினைவூட்டுகிறோம்
# பரிசு ரூ 1000

கல்லூரி மாணவ, மாணவியருக்கு. ''வாசல்'' அல்லது ''கிருஷ்ணு! கிருஷ்ணு!'' —இரு நாடகங்களில் ஏதேனும் ஒன்றை நீங்கள் உங்கள் கல்லூரி மேடையில் அரங்கேற்றலாம். இந்த ஆண்டு இறுதிக்குள் வெற்றிகரமாக நாடகத்தை நடத்த வேண்டும். கல்லூரி முதல்வர் அல்லது தமிழ்த் துறைப் பேராசிரியர் தவிர நாடகத்தை உள்ளூர் பிரமுகர்கள் இருவரேனும் பார்வையிட ஏற்பாடு செய்ய வேண்டும். இம்மூவரும் உங்கள் நாடகத்துக்கு அளிக்கும் மதிப்பெண் சான்றிதழைக் கல்கி ஆசிரியருக்கு அனுப்ப வேண்டும்.

மிக அதிகமான மதிப்பெண் பெற்றுள்ள கல்லூரி நாடகக் குழு ரூ. 1000 பரிசு பெறும். தப்பித் தவறி இரு நாடகக் குழுவினர் ஒரே அளவில் மிக அதிகமான மதிப்பெண்கள் பெற்றிருந்தால் சுஜாதாவோ அல்லது பூர்ணமோ நேரில் வந்து அந்த நாடகங்களைப் பார்வையிட்டு முடிவு தெரிவிப்பார்கள்.

---

மஞ்சுளா: யூனியன் ஆபீசில ரௌடிங்கள்ளாம் வருவாங்கப்பா. கையைப் புடிச்சு இழுத்திட்டா என்னப்பா செய்யறது நான்?

துளசி: அப்பா, இது உங்களுக்கே நன்னு இருக்காப்பா!

(மெல்ல அவர்கள் குரல்கள் குழப்பமாக ஒலிக்கின்றன. ''அப்பா, அப்பா, வேலைக்குப் போங்களேன்! வேலைக்குப் போங்கோ!'' என்று கோரஸ் போல ஒலிக்க)

கிருஷ்ணு ராவ்: அய்யோ! (பொறுக்க முடியாமல்) நிறுத்தித் தொலைங்கோ. போய்த் தொலைக்கிறேன். உங்களுக்காக நாள் பூராவும் பட்டனை அழுக்கிண்டிருக்கேன். போறேன். போறேன்.

(தலையில் அடித்துக் கொண்டு கிளம்புகிறுர்.)

• • •

(மேடை லேசாக இருள்கிறது. பாகவதர் குரல் ஒலிக்கிறது.)

பாகவதர்: அவர் என்ன பண்ணுவார்! மறுபடி முதலாளி இட்டப்படி போயி ''சரி மொதலாளி நான் நீங்க சொன்னபடிக்கே பொத்தானை அழுக்கிண்டே இருக்கேன் முதலாளி''ன்னு வேலையை ஒப்புத்துண்டுட்டார்.

சிஷ்யன்: அப்ப, கதை முடிஞ்சுடுத்தோல்லியோ. 'பவமான' பாடிட வேண்டியது தானே?

பாகவதர்: இல்லேடா, இல்லே; இன்னம் கொஞ்சம் இருக்குடாப்பா. அந்த மிஷின் வச்ச ஒரு வாரத்திலே ராவ், சதை எப்படி ஆப்பரேட் பண்றதுன்னு பழகிண்டுட்டார். இப்ப இதனோட நெளிவு சுளிவு எல்லாம் தெரிஞ்சு போச்சு. கொஞ்சம் கொஞ்சமா அந்தப் புராதனமான கலையை மறந்துட்டு, இந்த நவீனக் கலையைக் கத்துண்டுட்டார். என்ன சாமர்த்தியமா உற்பத்தி பண்றுர் பாருங்கோ.

(மேடை மறுபடி ஒளிபெற, சவுண்ட் எபெக்ட்டில் சப்கா சப்கா என்று தொடர்ந்து சப்தம் கேட்டுக்கொண்டிருக்க, மேடையின் இடது கோடியில் ராவ் தலைக்குக் குல்லாய், ஓவர்-ஆல் எல்லாம் போட்டுக் கொண்டு கண்ட்ரோல் பானலை இயக்கிக் கொண்டிருக்கிறுர். இயக்கம் என்பது என்ன? இடது கையால் ஒரு பொத்தானை அமுக்குகிறுர்; கொஞ்ச நேரம் காத்திருக்க, பச்சை விளக்கு எரிய, வலது கையால் ஒரு பொத்தானை அழுத்த சப்பக் என்று பொம்மை வந்து விழ அதை எடுத்து வைத்துவிட்டு மறுபடி பொத்தானை அமுக்க.... இதையே செய்கிறுர்.)

பாகவதர்: எப்படி இருக்கார் பாருங்கோ? சீருடை, குரங்குக் குல்லா எல்லாம் போட்டுண்டு ஜம்முனு. மூணு நிமிஷத்துக்கு ஒரு கிருஷ்ணர்! அமெரிக்கா

# காந்தமென அலங்காரம் கவர்ந்திழுக்க சாந்தமுள்ள பொட்டிடுவீர் நெற்றியிலே... தீட்டிடுவீர் கண்களிலே சிங்கார் கண்மை.

உங்களுக்குத் தெரியும் தரத்தின் சிகரம் எமது சிங்கார் டிலக்ஸ் கும்கும் பொட்டு—அதற்குப் பொருத்தமாய் இப்போது தீட்டிடுங்கள் சிங்கார் கண்மை— உன்னத பொருட்களால் உருவானது சிங்கார் கண்மை—கண்களுக்கு சிறப்பு. சிங்கார் வழங்கும் சிறப்புச் சலுகை—இலவச கண்மை மினி பேக் டிலக்ஸ் கும்கும் பொட்டு (பிந்தி) வாங்குந்தோறும்.

சிறப்புச் சலுகை

## இலவசம்

சிங்கார் கண்மை மினி பேக்

சிங்கார் டிலக்ஸ் கும்கும் வாங்குந்தோறும் சரக்குகள் தீரும் வரை.







## சிங்கார்

சிங்கார் டிலக்ஸ் கும்கும் பொட்டு (பிந்தி)
சிங்கார் டிலக்ஸ் கண்மை

everest/82/SH/670-tm

போகப் போற கிருஷ்ணர்! எல்லாம் கிருஷ்ணர்! குருக்ஷேத்திரத்திலேருந்து அமெரிக்கா வரைக்கும் பரவின கிருஷ்ணர்! நம்ம ராவை ஒரு நவீனப் பிரஜை யாக்கி, அவருக்கு மறுவாழ்வு தந்த கிருஷ்ணர்! என்னமா வேலை செய்யறார் பாருங்கோ!

(சப்பக் சப்பக் சப்தம். திடீரென்று சைரன் ஒலிக்கிறது. ஃபாக்டரியின் மற்ற சப்தங்கள் நின்றாலும் ராவின் வேலை நீடிக்கிறது.)

பாகவதர்: அவருடைய கடமை உணர்ச்சிக்கு எல்லையே கிடையாது. லஞ்சுக்கு வந்து எழுப்பினாக்கூட அவர்...

முத்து (வந்து): தாத்தா, வாங்க, லஞ்ச் ப்ரேக்கு!

(யந்திரத்தை ஆஃப் பண்ணுகிறான்.)

கிருஷ்ண ராவ் (மலைத்து): லஞ்ச் ப்ரேக்கா என்ன?

(இயந்திரம் போல நடந்து செல்கிறார். போகும்போது இரண்டு கைகளாலும் முத்து முதுகில் மான சீகமாக பட்டன்களை அழுத்திக் கொண்டே செல்ல, பின்னணி சங்கீதம் பாப் மெட்டை எடுக்க, பாப் ட்யூனில் பாட்டு ஒலிக்கிறது.)

'கிருஷ்ண முகுந்தா முராரே — ஜெய
கிருஷ்ண முகுந்தா முராரே
ஒருநாள் ஷிப்டில், ஓவர்டைம் இன்றி
ஒன்றன்பின் ஒன்றாய் வாராயோ...
கிருஷ்ண..கிருஷ்ண..கிருஷ்ண...கிருஷ்ண

(பாகவதர் பாப் டியூன் துடிப்புக்கு ஏற்ப, "கிருஷ்ண கிருஷ்ண" என்று இடைவெளி விட்டுப் பாட, ஒருவன் 'ச்ரூட்' டிலிருந்து ஒரே மாதிரியான கிருஷ்ணன் பொம்மையை எடுத்து எடுத்து வரிசையாக வைக்க... ஒளி குறைய....)

**(திரை)**



மனைவி: பங்கஜம் வீட்டுக்காரருக்கு பிளட் பிரஷராம்.. அல்ஸராம்...டயபட்டீஸாம்... ம்ஹூம்...

கணவர்: அதுக்காக நீ ஏன் பெருமூச்சு விடறே?

மனைவி: நானும் நாலு பேரு கிட்டச் சொல்லிப் பெருமைப் பட்டுக்கிற மாதிரி உங்களுக்கு ஒரு வியாதியும் இல்லையேன்னு தான்!

—சிவலட்சுமி

---

அட்டைப் படத்தில்....

## வெற்றி! வெற்றி!!

இவர்களுக்கு என்ன இத்தனை சந்தோஷம்? ஃபின்லந்து நாட்டில் நடந்த 1983 சர்வதேச விளையாட்டுக்களில் ஓட்டப் பந்தயங்கள், தூரம் தாண்டல், ரிலே ஓட்டம் ஆகியவற்றில் அற்புத சாதனைகளை நிகழ்த்தியதால் உருவான வெற்றிச் சிரிப்பு அது! கார்ல் லூயிஸ் மூன்று தங்க மெடல்களும் மேரி டெக்கர் இரு தங்கப் பதக்கங்களும் பெற்றார்கள். அமெரிக்கர்களான இருவரும் இதன் மூலம் லாஸ்ஏஞ்செலஸில் அடுத்த ஆண்டு நடைபெறவிருக்கும் ஒலிம்பிக் பந்தயங்களில் தங்கள் தேசத்தின் சார்பில் கலந்துகொள்ளத் தகுதி பெற்றவர்களாகிறார்கள்.



விளையாட்டிலே பெற்ற வெற்றி ஒருபுறம் இருக்கட்டும், நிறபேதத்தை வெல்வதிலும் அவர்கள் பெரு வெற்றி பெற்றுள்ளதைக் காண்கிறோமல்லவா! அதனால் வெற்றியின் பரிமாணம் இரு மடங்காகிறது. வெற்றிக்கு மேல் வெற்றி பெற்று வரும் இருவரையும் ஒலிம்பிக்கிலும் பிரகாசிக்க வாழ்த்துவோம்.

# பரவசமூட்டும் பல்வகை
# வண்ணங்களில்...

அழகிய கலைமணம் கமழும் பட்டு.
பருத்தி. ரெடிமேட் ஆடைகள்

**20%** தீபாவளி
சிறப்புத் தள்ளுபடியுடன்!
அக்டோபர் 10 முதல்

## ஹேண்ட்லூம் ஹவுஸ்

7. ரத்தன் பஜார். சென்னை-3.

• ஞாயிறும் திறந்திருக்கும்

மற்றும் கோயம்புத்தூர்
27/28, திவான் பகதூர் ரோட்,
ஆர். எஸ். புரத்தில்
எமது ஷோருமிலும்
இச்சலுகை உண்டு!

ADWAVE/HH/2454

# கடைசிக் கேள்வி

-ரா. வேங்கடசாமி-

இரவு எட்டு மணிக்கே தெருவில் மயான அமைதி கொலுவிருக்கத் தொடங்கி விடும். மாலை ஆறு மணிக்கே கடைகளை மூடிவிட்டு வீட்டை நோக்கிப் பறந்துவிடும் வியாபாரிகள் நிறைந்த அந்தத் தெருவில்தான் பல காரியாலயங்களும் இருந்தன.

எப்போதோ ஒரு தடவை. என்றைக்கோ ஒரு நாள் ஏதோ ஒரு காரியாலயத்தில், யாரோ ஒருவர் வேலைப் பளுவின் காரணமாக ஓவர்டைம் செய்வதுண்டு.

அரவிந்தனுக்கு அன்று வேலை இருந்தது. சொந்த வேலை. நாளைக்கு இன்கம்டாக்ஸ் உபத்திரவம்! இன்று இரவு எந்த நேரமானாலும் அவனே உட்கார்ந்து சில கணக்குகளை ஒழுங்குபடுத்த வேண்டும்.

அந்தத் தெருக் கோடியில் இருந்த ஏழுமாடிக் கட்டிடத்தில், ஏழாவது மாடியில் அவன் காரியாலயம்.

அரவிந்தன் கட்டிடத்தை அடைந்த போது அங்கே ஜனக் கூட்டமே இல்லை. அது அவன் எதிர்பார்த்ததுதான். இப்படி எத்தனையோ இரவுகள்! லிஃப்டை இயக்கும் சுந்தரம் 'குட் ஈவினிங்', 'குட் நைட்' மட்டும் சொல்லிப் பழக்கப்பட்டவன். வேறு பேச்சுக்கு இடமில்லை. அவனுக்குப் பேசவும் தெரியாது.

இன்று சுந்தரத்துக்குப் பதில் வேறு யாரோ ஒரு புதியவன் இருந்தான்.

''எத்தனாவது மாடி சார்?''

புதியவனுக்குத் தெரிய நியாயமில்லை.

''ஏழாவது.''

கதவு படீரென்று மூடப்பட்டது. லிஃப்ட் உடனே இயங்கியது. புதியவன் விறைப்பாகப் பட்டாளத்துக்காரன் போல் நின்றான். அவன் முகத்தில் கடுமை நிறைந்திருந்தது.

ஏன்?

ஏழாவது மாடியைத் தொட்டதும், ஆபரேட்டர் கதவைத் திறக்கவில்லை.

''ஏனப்பா கதவைத் திறக்க மாட்டாயா?'' அரவிந்தன் கேட்டான்.

''சார்' ஒரு கேள்வி.''



பதில் சொல்லாவிட்டால் கதவைத் திறக்க மாட்டேன் எனும் பாவனை முகத்தில்!

''கேள்.....''

''சுதந்திர ஈழம் கொடுக்கப்பட வேண்டுமா வேண்டாமா?''

கடினமான கேள்வி — அரவிந்தன் அவன் முகத்தைப் பார்த்தான்.

முகத்தில் மாறுதல் இல்லை. பதில் சொல் என்கிற அதிகார தோரணை.

''சுதந்திர ஈழந்தான்!'' பட்டும் படாமலும் பதில் சொன்னான் அரவிந்தன்.

''சரியான பதில்'' என்று சொல்லிக் கொண்டே அந்தப் புதிய ஆபரேட்டர் கதவைத் திறந்தான்.

அரவிந்தனுக்கு அதற்குள் லேசாக வியர்த்திருந்தது. சரியான பதில் சொல்லாமல் இருந்திருந்தால்? அரவிந்தன் நிலை என்னவாகியிருக்கும்...?

அவன் அதைப் பற்றி அதிகம் யோசிக்கவில்லை. தன் வேலையில் மூழ்கிவிட்டான்...

ஒரு மணி நேரத்துக்குப் பிறகு...

'லிஃப்ட்' சப்தம்.

தொடர்ந்து அவனது காரியாலயத்திற்குள் யாரோ நடக்கும் சப்தம்....

''யார் அது?'' அரவிந்தன் கேட்டான்.

கதவு திறக்கப்பட்டது.

வந்தது அந்த லிஃப்ட் ஆபரேட்டர்.

அரவிந்தனுக்கு எரிச்சலாக இருந்தது.

''இன்னொரு கேள்வி சார்...''

அரவிந்தனுக்கு வந்த கோபத்தில் அருகில் இருந்த ரூல் தடியை எடுத்து அடித்துவிடலாமா என்றுகூட நினைத்தான். தனியாக இருக்கும்போது ஏன் வீண் தொந்தரவு?

பிள்ளையின் தந்தை: இத்தனை பேரும் உங்க உறவினர்களா?

பெண்ணின் தந்தை: ம்ஹூம்... பெண்ணை அலங்கரிக்க, புடவை, நகைகள், வீட்டை அலங்கரிக்க சோபா செட்கள் தந்தவங்க. பங்ஷன் முடிந்ததும் எல்லாத்தையும் வாங்கிக்கிட்டுப்போகக்காத்துக்கிட்டிருக்காங்க... பெண்ணைக் கூப்பிடட்டுமா?

—சிவலட்சுமி



''என்ன கேள்வி...? சீக்கிரம் சொல்...''

''நீங்கள் உண்மையை விரும்புகிறீர்களா? இல்லை பொய்யையா?''

''இதென்ன கேள்வி?... எனக்கு எப்போதும் உண்மைதான் பிடிக்கும்... கேள்விக்குப் பதில் சொல்லி விட்டேன் அல்லவா... தயவு செய்து இங்கிருந்து....''

''நிச்சயம் உங்களுக்கு அதில் நம்பிக்கை இருக்கிறதல்லவா?''

''இருக்கிறது...தயவு செய்து நீ இங்கிருந்துபோய்விடு. நான் வேலை செய்யவேண்டும்....'' என்றான் அரவிந்தன்.

சொன்னது காதில் விழாதது போல் அங்கேயே இரண்டொரு நிமிடம் நின்றான் அவன். பிறகு கதவை நோக்கி நடந்தான்.

''நீங்கள் சொல்வதை நான் நம்புகிறேன்'' என்று அவன் வாய் முணுமுணுத்தது.

அதுவும் அரவிந்தன் காதில் விழுந்தது.

''நன்றி'' என்றான் பதிலுக்கு.

கதவு மூடப்படும் சப்தம், 'லிஃப்ட்' வேலை செய்யும் சப்தம்.. எல்லாமே அரவிந்தன் காதில் விழுந்தன.

அதற்குப் பிறகு அரவிந்தனுக்கு வெகு நேரம் வேலை ஓடவில்லை. ஒரு 'லிப்ட்' ஆப்பரேடர் இந்த மாதிரி சம்பந்தாசம்பந்தம் இல்லாமல் கேள்வி கேட்பதாவது?

தாகம் எடுத்தது. தண்ணீரைக் குடித்து விட்டுத் தன் அறைக்குத் திரும்பும்போது திரும்பவும் 'லிப்ட்' சப்தம். தொடர்ந்து 'நடை'!

காரியாலயத்தில் நடு ஹாலில் அரவிந்தன் தயங்கி நின்றான்.

அவனைத் தேடிக் கொண்டு உள்ளேயே வந்து விட்டான் 'லிப்ட்' ஆபரேட்டர்.

இந்தத் தடவை அவன் கையில் கத்தி இருந்தது.

''ஓ! நீங்கள் இங்கேதான் இருக்கிறீர்களா?'' அவன் முகத்தில் குரூரமான சிரிப்பு.

''நீங்கள் எவ்வளவு புத்திசாலி என்பதை நான் அறிய வேண்டும்... இன்னொரு கேள்வி கேட்கப் போகிறேன்... நன்றாக யோசித்துப் பதில் சொல்லுங்கள். பத்து விநாடிக்குள் எனக்குப் பதில் வேண்டும்... அன்பா? வெறுப்பா? இதில் உங்களுக்குப் பிடித்தமானது எது?''

ஒரு மாங்காய் மடையன் கூட —இதற்குச் சரியான பதிலைச்சொல்லி விடுவான்... இந்தப் பைத்தியக்காரனுக்கு இது சரியான பதில் தான் என்று தெரிய வேண்டுமே...

அரவிந்தன் யோசித்தான்.

இரவு நேரத்தில் அவனுக்கு இப்படி ஒரு தலைவலியா?

''சீக்கிரம் சொல்லுங்கள், நேரமாகிறது!''

''அன்புதான். இதிலென்ன சந்தேகம்?''

''கரெக்ட்... சரியான பதிலைச் சொல்லி விட்டீர்கள். பதிலைச் சொல்லாமல் போய் விடுவீர்கள் என்று நான் நினைத்தது தவறாகப் போய் விட்டது.'' அவன் பலமாகச் சிரித்தான்.

இரவு நேரத்தில் அப்படிப்பட்ட சிரிப்பு பயங்கரமாகத்தான் இருந்தது.

அரவிந்தன் பயந்தான்.

''நீ கேட்ட கேள்விகளுக்கு நான் ஒழுங்காகப் பதில் சொல்லி விட்டேன் இல்லையா?

## ஒலிம்பிக் விளையாட்டு பயிற்சி அளிக்கும் ஜிம் ஓ'டோஹர்த்தி கூறுகிறார்:

# "காம்ப்ளான் ஒண்ணுதான் வலுவையும் தெம்பையும் உருவாக்குகிறது."

ஒலிம்பிக் வீரர் ஜிம்ஓ'டோஹர்த்தி, இந்தியா உள்பட உலகம் முழுவதிலுமுள்ள இளம் விளையாட்டு வீரர்களுக்கு கடினமான போட்டிகளுக்காக பயிற்சி அளித்துள்ளார். 'பிறக்கும்போதே சாம்பியன்களாக பிறப்பதில்லை அவர்கள் உருவாக்கப்படுகிறார்கள்'. என்பதை அவர் நம்புகிறார். ஒருவரை வெற்றியாளராக்குவது கட்டுப்பாடான சக்தி—மற்றும் உடல் சக்தி.

"நீச்சல் வீரர்கள், ஓட்டம் மற்றும் களவிளையாட்டு வீரர்கள், குறிப்பாக வளரும் குழந்தைகளுக்கு இதை சிபாரிசு செய்கிறேன்" என்கிறார் ஜிம் ஓ'டோஹர்த்தி. ஒரு பரிபூரண உணவாகும் காம்பளான்—எளிதில் ஜீரணிக்கவல்லது. தெம்பு அபிவிருத்தி செய்யும் ஆரோக்கிய வளர்ச்சிக்கான 23 மூலதார ஊட்டச்சத்துக்களுடன் கூடியது."

ஜிம் ஓ' டோஹர்த்தி கூறுவதை எடுத்துக் கொள்ளுங்கள். ஆரோக்கியமான முழுமையான வளர்ச்சிக்கு உங்கள் குழந்தைக்கு அன்றாடம் வழங்குங்கள் காம்ப்ளான். குழந்தைகள் விரும்பிடும் இனிய சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.




# காம்ப்ளான்®

## –திட்டமிட்ட பரிபூரண உணவு

GLC.9-2012TAM

இந்தக் கட்டிடத்தின் 'இரவு வாட்ச்மேன் இங்கே வந்து விடுவான்... அவன் வருவதற்குள் நீ இங்கே இருந்து போய்விடு.. கையில் கத்தியுடன் உன்னைப் பார்த்தால் வீண் தகராறு.''

இதைக் கேட்ட அவன் மீண்டும் சிரிக்க ஆரம்பித்தான்.... அதே பயங்கரச் சிரிப்பு.

''வாட்ச் மேன்...! உங்களைப் போல் புத்திசாலி அல்ல! என் கேள்விகளுக்கு அவன் பதில் சொல்லாமல் இடக்குப் பேசினான். இதோ இந்தக் கத்தி அவனுடையதுதான்...''

''அப்படியென்றால்...''அரவிந்தன் பயந்து கொண்டே கேட்டான்...

''கீழே அவன் அறையில் இறந்து கிடக்கிறான்...''

அரவிந்தனுக்கு மூச்சே நின்று விடும்போல் இருந்தது. உடம்பில் வியர்வை வெள்ளம். கால்கள் நிற்கவே பலமில்லாதவை போலத் தோன்றின.

அந்த நேரத்தில் அவன் அறையில் 'போன்' ஒலித்தது.

''போனை எடுத்துக் கேட்பது நல்லதல்லவா?'' அரவிந்தன் அங்கிருந்து நகர முயன்றான்.

''இல்லை... நான் பேசுகிறேன்... நீங்கள் என்னுடன் வாருங்கள்...'' கத்தியைக் காட்டியபடி அவன் முன்னால் நடக்க அரவிந்தன் பின்தொடர்ந்தான்.

அரவிந்தன் அறையில்தான் போன் அலறிக் கொண்டிருந்தது.

லிஃப்ட் ஆபரேட்டர் ரிசீவரைக் கையில் எடுத்தான். ''ஹலோ'' என்றான்.

சில விநாடிகள் பேசுவதைக் கேட்டுக்கொண்டிருந்தான் பதில் பேசாமல்.. ரிசீவர் பழைய இடத்தில் வைக்கப்பட்டது. அரவிந்தனைப் பார்த்து அவன் சிரித்தான்.

''உங்கள் பெயர் என்ன?''

''அரவிந்தன்.''

''உங்களிடம்தான் போனில் செய்தி ஒன்றைச் சொன்னார்கள்....''

''என்ன?''

''மீண்டும் செய்தி வரும்வரை நீங்கள் இந்தக் காரியாலயத்தை விட்டு நகரக் கூடாதாம்... ஏனெனில் ஒரு பைத்தியக்காரன் இந்தப் பக்கமாக மாலையிலிருந்து சுற்றிக் கொண்டிருக்கிறானாம்! அவன் கொலையும் செய்வானாம்... இதுதான் போனில் வந்த செய்தி....''

அரவிந்தன் லிப்ட் ஆபரேட்டரை இப்போதுதான் நன்றாகப் பார்த்தான்... முகத்தில் அதே குரூரப் புன்னகை...

கண்களில் கொலை வெறி...

வைத்திருந்த கத்தியில் காய்ந்திருந்த இரத்தம்!

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''எதைப் பற்றி?'' அரவிந்தன் கேட்டான்.

''உங்கள் முகத்தைப் பார்த்தால் குழப்பமடைந்தவரைப் போல் காணப்படுகிறீர்கள். பயந்து போய்விட்டீர்களா?...பயப்படவேண்டாம். நீங்கள் மிகவும் புத்திசாலி என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்... கடைசியாக ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட்கிறேன். அதற்கு நீங்கள் பதில் சொன்னால் போதும்... பத்து விநாடிகள் தருகிறேன்....

''நான் பைத்தியக்காரனா? இல்லை நல்ல மனநிலையில் உள்ள மனிதனா?

''சரியான விடை சொல்லுங்கள்...''

இதற்கு அரவிந்தன் என்ன பதில் சொல்லி இருப்பான்?



சர்வர்: ஒண்ணு சொல்றேன் கோபிச்சுக்க மாட்டீங்களே?

சாப்பிட வந்தவர்: பரவாயில்லே சொல்லு.

சர்வர்: ஜில்லுனுபோண்டா, வடை, நேத்துப் போட்ட சப்பாத்தி, பூரி பரோட்டா.... இதைச் சாப்பிட ஹோட்டலுக்கு வரணுமா சார்? பேசாம வீட்டிலேயே பார்த்துக்கக் கூடாதா?

-சிவலட்சுமி

பத்திரிகை ஆசிரியர்: ரொம்பத் தாங்கமுடியலே!

உதவி ஆசிரியர்: எதைச் சொல்றீங்க?

ப. ஆ: இந்த 'முந்தானை முடிச்சு' படம் வந்ததிலிருந்து முருங்கைக் காயைச் சம்பந்தப்படுத்தி நம்ம வாசகர்கள் எழுதிக் குவிக்கிற ஜோக்கைச் சொல்றேன்!

—எஸ். வெங்கடேசன்



## பெருமையுடன் அளிக்கின்றோம்

# ஆயுர்சக்தி® யை-புதிய

## முவ்வகை செயற்திறன் கொண்ட ஆயுர்வேத வலி நிவாரணி.

ஆயுர்வேத தன்மை அடங்கிய முவ்வகையில் செயலாற்றும் புதிய அதிவேக வலி நிவாரணி.








ஆயுர் சக்தியின் தனித் தன்மை என்ன ?

இப்பொழுது, உங்களுக்கு தலைவலி, ஜலதோஷம், தசைப்பிடிப்புக்களைப் போக்க தனித்தனியான மருந்துகள் தேவையில்லை. ஆயுர்சக்தி இவைகளை ஒன்றாக இணைத்து உருவாக்கப்பட்டுள்ளது. பல மூலிகைகளைக் கொண்ட ஆயுர்சக்தியின் திறன் மிக்க கலவைப் பொருட்கள் உடனடியாக வேலை செய்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

பல வருட ஆராய்ச்சிகளின் விளைவாக ஆயுர்வேத முறையில் அரிய பல மூலிகைகள் மற்றும் சுத்தமான மூலிகைத் தைலங்களைக் கொண்டு ஆயுர்சக்தி தயாரிக்கப்பட்டுள்ளது.

எனவே அடுத்தமுறை நீங்கள் தலைவலி, ஜலதோஷம் அல்லது தசைப் பிடிப்புகளால் அவதியுறும் போது புதிய சக்திவாய்ந்த ஆயுர்சக்தியை நாடி விரைவில் நலம் அடைவீர்.

உங்களது வீட்டு உபயோகம் மற்றும் பயணத் தேவைகளுக்கு ஏற்ப மூன்று விதமான அளவுகளில் கிடைக்கின்றது.

ஆயுர்சக்தி — முவ்வகையில் செயலாற்றும் அதிவேக வலி நிவாரணி

இத்தரமான படைப்பினை அளிப்பவர்கள் ;

பொருக்கா இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.

கன்ஸ்யூமர் ப்ராடக்ட்ஸ் டிவிஷன்,

22-ஏ, கதீட்ரல் சாலை, சென்னை-600 086.

தொலை பேசி : 83782

Interpub-(M)-83

# இரும்பு குதிரைகள்

## அத்தியாயம் 41

சகலமும் குழப்பமாக இருந்தது. எல்லா நடவடிக்கைகளும் சாங்கியமாய் சடங்காய் நடந்தன. எது சடங்கு எது சாதாரணம் என்று தெரியாமல் விழிக்க நேர்ந்தது. எல்லாச் சடங்கும் குறைவறச் செய்துவிட வேண்டும் என்கிற பயமும் தொற்றிக்கொண்டது.

''புது லாரியாலே மாத்திட்டியேப்பா. ஆக்ஸில் ஷாப்ட் புதுசா பழசா. எதுல வேணு கொறை வை. ஆக்ஸில் ஷாப்ட்ல மட்டும் விளையாடாதே. துட்டு பால் மாறுதே... புதுசு போட்டு. ஆமா...''

''டயர்தான் தம்பி முக்கியம். முன்னுல வழுக்கை, பின்னுல பொத்தல்னு போட்டுக்கிட்டு ஊர் தாண்டிப் போறுங்க. கல்லு தட்டினுப் போறும். வண்டி நிலை கொள்ளாத ஆடும். அப்புறம் இடிச்சுத்தான் நிறுத்தணும். இடிக்கிற இடம் மரமா இருந்தாப் போச்சுது. பாலமா இருந்தா... இடிக்க எடமே இல்லாத பள்ளமாப் போய்ட்டா...''

''அப்படித்தான் போன மாசம் கேரளாக்காரன் லாரி ஒண்ணு மதகுலே சொருகி...''

வயிறு கலங்கும். இனம் தெரியாத பயம் ஒன்று ஓசையின்றி வயிறு பிசையும். சோறு உருட்டித் தின்கிறபோதும் டீ குடிக்கிற போதும் தூக்கம் வராமல் புரளுகிற போதும் யார் யார் பேச்சோ காதில் குடைந்து கலவரம் எழுப்பும். வண்டி சிறிது சிறிதாகப் பட்டறையில் சுய உருவம் பெற்றுக் கொண்டிருந்தது. செல்லத்



தம்பி கவலையுடன் வண்டியருகே சதா நேரமும் இருந்தான். நாலைந்து நாள் அவனை ஊன்றிக் கவனித்து விட்டு அவன் கவலையைப் புரிந்து கொண்டு முதலியாரிடம் கௌசல்யா விஷயம் சொன்னாள்.

''முன்னுக்கு வரணும்னு ஆசைப்படறவன் பதற்றமாத்தான் இருப்பான் கௌசல்யா. அவன் பதற்றப்படறது இருக்கட்டும். நாலு இடம் பொருக்கினமா, போனமான்னு நீயும் இனிமே இருக்கக் கூடாது. ஒனக்கும் லாரி பத்திக் கவலை வரணும். நீயும் துட்டு எண்ணக் கத்துக்கணும். தொழிலு லாபமா நஷ்டமான்னு தினம் கேட்டுக்கணும். பொறுப்பு இருக்கிற பொம்பளை தூக்கியெறிஞ்சு எவரையும் பேச முடியாது. எல்லாத்துக்கும் தலையாட்ட முடியாது. என் கவலையெல்லாம் செல்லத்தம்பி பத்தியில்லை. ஒன்னை மாத்தணுமேன்னு தான் சவலை.''

''ஏன் இப்படிச் சொல்ற... நான் யாரண்டையும் சண்டைக்குப் போறதில்லையே...''

''சண்டை போடக் கூடாதுங்கறது மட்டுமில்ல. சாமர்த்தியமும் வரணும். நீயும் நாலுபக்கம் சுத்தி வேலாடு புடிச்சாகணும். நானும் சுத்தி வோடு புடிப்பேன். சுருளு வோடு அடக்கிக் கவுறுகட்டுவேன். லாரி தவிர வேற புத்தியே நமக்கு இருக்கக் கூடாது!''

நாலு அடித் தொலைவில் குத்துக்காலிட்டு முதலியார் சொல்கிற சூட்சுமம்மெல்லாம் கௌசல்யா கேட்டுக் கொண்டிருந்தாள்.

அந்த லாரி கடவுள் துணை என்கிற முன்பக்கத்துக் (கபின் போர்டைத் தாங்கி நின்றது. ஒரு அம்மாவாசை அன்று தண்ணித் தொட்டித் தெரு விளிம்பில் செல்லத்தம்பியின் கடவுள் துணை நின்றிருக்க முதலியார் பூசை ஆரம்பித்தார். லாரி ரிப்பேர் செய்த பட்டறைகளுக்கு மரியாதை செய்தார். காந்திலாலுக்கு மேல்துண்டு போர்த்தினார். கௌசல்யா இடப்பக்கமும் முதலியார் வலப்பக்கமும் நிற்க செல்லதம்பி லாரி முன்னே நின்று போட்டோ பிடித்துக் கொண்டான். காந்திலால் ஹார்பரிலிருந்து திருச்சிக்கு முதல் லோடு கொடுத்தான். அட்வான்ஸ் ஐநூத்தியொன்று ஹல்வா டப்பியில் வைத்து மூன்றுபேரிடமும் நீட்டினான்.

முதலியார் பெரிய சூடக்கட்டியை வெற்றிலையில் வைத்து லாரி முன்னே பரப்பினார். குங்குமப் பொட்டலத்தை எடுத்துச் செல்லத்தம்பியிடம் நீட்டி, 'போய் பொட்டு வை' என்றார்;

செல்லதம்பி நடுங்கும் விரலில் குங்குமம் எடுத்து லாரி முகப்புக்குப் போனான்.

''எலேய் அந்தப் பொம்பளை நெத்தியில வைடா. லாரி வாங்கினாலும் வாங்கினான்... லாரியத் தவிர வேற நெனைப்பே இல்லடா இவனுக்கு.''

''மொதலியாரே கௌசல்யா நெத்திலயா வுடச் சொல்ற...''

''ஏன் வெறும் சேர்மானமா இருந்துடலாம்னு பாக்கறியா. உம்மேல அது உசிரை

—பாலகுமாரன்—



வச்சிக்கினுருக்கு. இதைவிட ஒனக்கு பொம்பளை கெடைக்கமாட்டா. மனசுல குலதெய்வத்தை நெனைச்சுக்கினு பொட்டுவை.''

கௌசல்யா கை இரண்டையும் வயிற்றின் குறுக்கே கட்டிக் கொண்டு நெற்றியில் செல்லதம்பி இட்ட குங்குமம் ஏற்றாள். உடம்பெல்லாம் சூடு பரவியது. உதறி உதறிப் போட்டது. வயிறு குமைந்து இடுப்பு நெகிழ்ந்து என்னென்னவோ செய்தது. குனிந்து செல்லதம்பியைப் பணிந்தான். ஓடிப்போய் முதலியார் காலைக் கட்டிக் கொண்டான். ''யப்பா யப்பா...'' என்று கதறினாள். அப்பாவைத் தெரியாமல், அம்மாவையும் புரியாமல் அநாதையாய் வளர்ந்த பெண், அட்டகாசம் செய்த பெண், யாருக்கும் அடங்காத அரசி அழுது துவண்டது வேடிக்கையாய் இருந்தது.

''எழுந்துரு புள்ள... தெருவுல கிடந்து பொறளாதே. இப்ப நீ லாரி ஓனரு. மெதப்பா' நட. மொள்ளப் பேசு. எழுந்திரு மொதல்ல.''

கௌசல்யா எழுந்தபோது அவளுக்குள் உலகம் மாறிப் போயிற்று.

''சூடக்கட்டி ஏத்தறேன். இரண்டு பேரும் ஏறி வண்டில குந்துங்க. சூடம் மலையேறினதும் சாவி போட்டு ஒரே டேக்குல எஞ்சின் எடுத்து அத்தினி எலுமிச்சம்பழமும் நசுங்க ரூப்பல வண்டி ஓட்டணும். எங்கியும் நிறுத்தாத நேரா ஹார்பர் வாசலில போய் நிறுத்தணும். நான் ஹார்பராண்ட வரேன். லோடு ஏத்தினதும் எங்கினு கோவில்ல நிக்க வச்சு கழிப்பு கழிச்சிடலாம்.''

செல்லதம்பி ஸ்டியரிங்கைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். இடப்பக்கம் கௌசல்யா போர்த்தியபடி உட்கார்ந்திருந்தாள். ஒரு தீக்குச்சியில் சூடம் சட்டென்று பற்றியது. ஒரு அடி உயரம் தகதகவென எரிந்தது. தீயினூடே முதலியாருக்கும் நடராஜ தரிசனம் தெரிந்தது.

''என்னடா பொம்பளை ஏத்திக்கினு போற வண்டில...'' செக்போஸ்டில் கேட்டார்கள்.

''அது லாரி ஓனருங்க... முதல் தடவையாக வண்டி எடுக்கிறாங்க... அதான் ஓட்டம் பார்க்கக் கூட்டிக்கிட்டுப் போறேன்.''

''பொம்பளை வரக் கூடாதா லாரில...''

''ஓட்டறவனுக்குக் கவனமில்லாத பூடும்னு ஏத்த மாட்டாங்க.''

''அப்ப மொதலியார் ஏன் உங்கூட போ சொல்லுச்சு...''

''ஒனக்கும் சிரமம் தெரியணும்னுதான். செக்போஸ்ட்டு மடக்காது. திருட்டுபயம். வண்டி மொடங்கி நடுக்காட்ல மாட்டறது எல்லாம் தெரியணும்னுதான்.''

''வண்டி எப்படி இருக்குது கைக்கு...''

''இது வரைக்கும் சுத்தமாக ஓடுது.''

''எங்கே சோறு துன்னணும்?''

''தொழுப்பேடு.''

''ஐய... பொம்பளைங்க சுத்தி சுத்தி நிமிண்டறே எடமாமே. அங்க ஏன் நிறுத்தற...?''

''நிமிண்டற பொம்பளை எங்கதான் இல்ல... நாம பாட்டுக்குக் காதுல வாங்காத சாப்டமா கிளம்பினமான்னு போய்டணும்.''

''ஐய்யோ... நாப்பது ஐம்பது பொம்பளைங்க இருக்காப்ல தெரியுதே... அங்கப் பாரேன்... அட... ஐயரு படுத்துக்கினுக்கிறாரு. காந்திலால் கடைக்கு வருமே கம்பனி ஐயரு.''

''அடேடே... விஸ்வநாதன். இங்கிலீஷ் கம்பெனி. நாம் போயிருக்கேன் அவரோட ஆபீஸுக்கு. கௌசல்யா போய்க் கும்புட்டுவோடு கேளு அவருகிட்ட.''

''இருட்ல போயாப் பேசறது... நாமாட்டேம்பா.''

''அடச்சீ... நமக்கு வியாபாரம் முக்கியம். எம்டியாவா திரும்பறது. போய்க் கும்புட்டுக் கேளு. கிடைச்சா புண்ணியம். எறங்கிப் போ. அட... நானும் கூடவரேன் போ...''

''யாரோ பொம்பளை கூட இருக்காரே..''

''இரு இப்ப வேணும். ஐயரு ஏன் இந்தப் பொம்பளைக்கிட்டல்லாம் போறாரு. கருமாந்திரம்...''

''ச்சு. நானும், நீயும் ரொம்ப யோக்கியம். எதுக்கு பெரிய வார்த்தையெல்லாம் சொல்ற.''

புல்மேட்டிலிருந்து விஸ்வநாதன் எழுந்தான். அழுத்தி உட்கார வைத்த வசந்தாவை விலக்கினான். தோளில் கை வைத்து ''வரேன் வசந்தா நல்லா இரு.'' என்றான்.

''அப்ப தங்க மாட்ட...''

''நீதான் சொல்லிப்பிட்டியே தகிரியம் இல்லாதவன்னு..''

''என்ன இப்பிடி... சொல்லுக்குப் போய் கோச்சுக்கிற...நல்லா தெரிஞ்சாவாட்டிதானே மனசு தொறந்து பேசறம்...''

''பேசினதே போதும் எனக்கு. வரட்டுமா... பரோட்டாவுக்கு எவ்ளோ ஆச்சு..''

''லட்ச ரூபா. குடுத்துட்டுப் போ.''

''லட்சம் குடுத்தா என்ன பண்ணுவே. அப்பவும் இதே வியாபாரம் தானே.''

''ஒனக்கும் எனக்கும் ஒரே வியாபாரம் தான். என்னிக்கு மீறினோம்.''

''குத்திக் காட்றதுல அத்தினி சுகம்.''

''நாம குத்துப் படறப்பதான் நோவுது. அடுத்தவங்களை மிதிக்கிறப்போ தெரியலை.''

''அது வாஸ்தவம்.''

''என்ன அது வாஸ்தவம்.''

''இது நேத்து வரைக்கும் தெரியலை. இன்னிக்குப் புரிஞ்சுப் போச்சு. அடுத்தவன் புத்தி பத்தி, வாழ்க்கை பத்தி அசிங்கமாப் பேச யாருக்கும் யோக்கியதை இல்லை. அப்படிப் பேசினு— அது அலட்டிக்கறதுத் தவிர வேறொண்ணும் இல்லை...''

''யம்மா... நெஞ்சு மொத்தமும் கொட்ற. நீயும் நல்லாத்தான் இருப்ப தொரை. உன்ன வுடவே மனசில்ல. துண்டப் போட்டு தரதரன்னு வூட்டுக்கு இளுத்துட்டுப் போய்டணும்னு தோணுது.''

விஸ்வநாதன் சிரித்தான். ''நாம் வரேன் வசந்தா. அப்புறம் எப்பவாச்சும் பார்ப்பம்.''

மடு இறங்கிப் பாதையோரம் நடந்து காருக்குப் போனான். ஆணும் பெண்ணு

மாய் யாரோ அரை இருளில் கும்பிட்டார்கள்.

"எனக்கு வேணும்பா."

"இல்லிங்க நான் செல்லதம்பி. தண்ணித் தொட்டித் தெரு."

"அடேடே. மன்னிச்சுக்கப்பா. வெளிச்சம் தெரியலே. தப்பா நெனைச்சுக்காதே..."

நகர்ந்து ஒட்டல் வெளிச்சத்திற்குப் போனார்கள்.

"நான்செல்லத்தம்பிங்க.இதுகௌசல்யா. ரெண்டு பேரும் கூட்டு சேர்ந்து லாரி வாங்கிருக்கோம். ராவுத்தர் மேஸ்திரி நடேசமுதலி, அவரும் பங்கு போட்டிருக்காரு. மொதமொதல்ல வண்டி எடுத்தோம். திருச்சி லோடு. திரும்பறப்போ ஒங்க லோடு எதுனாச்சும் இருந்தா உதவி பண்ணவேணும்."

"இந்த அம்மா காந்திலால் கடை பொம்பளை, இல்லே? கடை பெருக்குமே அதானே இது...?"

"ஆமாங்க. குருவி சேக்கற மாதிரி துட்டு சேர்த்து லாரி வாங்கினோம். ஒங்க மாதிரி பெரிய மனுஷங்க தயவு வேணும் சாமி."

"வெரிகுட். ரொம்ப சந்தோஷம். எங்க வண்டி?"

விஸ்வநாதனுக்குவண்டியைச்சுற்றிக்காட்டினார்கள். 'டயரு புதுசா.... என்ன விலே?...?' விசாரிப்பது நாகரீகம் என்று விஸ்வநாதன் கேட்டான்.

"அஞ்சாயிரத்து நாறு ரூபா. ரெண்டு செட்டு டயரு. ட்யூப்..." கௌசல்யா பதில் சொன்னாள்.

"எப். சி. சரியா இருக்கா."

"வர பங்குனி மட்டும் இருக்குதுங்க." மறுபடி பதில் சொன்னாள்.

"இந்தாப்பா ஒன்னோட சம்சாரமா?"

"சாயந்திரம் தாங்க பொட்டு வச்சேன். இனிமேதான் வூடு பாத்து வைக்கணும். அதுவும் மூணுல ஒன்னு லாரிமேல துட்டுப் போட்டுருக்குங்க."

"அதாவது சம்சாரம் மாதிரி. அதே சமயம் வியாபாரத்திலேயும் பங்கு உண்டு."

"அப்படித்தாங்க. அதான் தெளிவு கஞவு காட்டக் கூட்டியாந்தேன்."

"பொம்பளே ஒனருன்னு தப்பா நெனைச்சுக்கக் கூடாதுங்க. ரொம்பக் கஷ்டப்பட்ட ஜீவனுங்க என்னுது. எப்பிடியாச்சும் நாலு காசு சேக்கணும். நிமிந்து நிக்கணும்னு குறியா இருக்கறோம். எப்பிடியாச்சும் கைதூக்கி வுடணும் சாமி" கௌசல்யா போர்த்திய தலைப்புப் பிரியாது கைகூப்பினாள்.

இதோ... இதோ இன்னொரு வாழ்க்கை. வேறு ஒரு முறை... என்ன ஆயிற்று. எனக்கு... ஞானம் கிடைக்கும் நாளா... பதில் தரப்படும் நாளா — தீர்ப்பு நாளா?

இங்லீஷ் கம்பெனியின் - பன்னிரண்டடி உயர புது பாய்லரும் ஏகப்பட்ட குழாய் இணைப்புகளும் மோட்டாரும் திருச்சியில் செல்லத்தம்பியின் கடவுள்துணையில் ஏறின. "மேல வாழத்தாரு வாழ இலேன்னு ஏத்தின தொலேச்சுடுவேன் செல்லதம்பி... வாடகை



"முட்டாள்! கண் டாக்டரை அழைத்துக் கொண்டு வா'ன்னு சொன்னால் நீ போய்க் கண்டக்டரை அழைத்துக் கொண்டு வந்திருக்கியே?"

மெட்ராஸ்ல வந்து வாங்கிக்க..." விஸ்வநாதன் கைகாட்டினான்.

"சத்தியமாசெய்யமாட்டேங்க." செல்லத்தம்பி நிலம் தொட்டான்.

செல்லதம்பி சிந்தாமணியில் வெள்ளைக் கதர் சட்டை வாங்கினான். கௌசல்யாவுக்கு நைலெக்ஸ் புடவை எடுத்தான். முதலியாருக்கு சேலம் வேட்டியும் மேல்துண்டும் விலே பேசினான்.

கொள்ளிடம் பாலத்தில் நாட்டு சர்க்கரை பதினைந்து மூட்டைக்கு இடம் கேட்டார்கள். செல்லதத்தம்பி திரும்பிக் கௌசல்யாவைப் பார்க்க சரியென்றாள். மூட்டைக்கு இருபது வீதம் முந்நூறு ரூபாய் தனியே கவரில் மடித்துக் கொண்டாள்.

"மேல்துட்ட அப்படியே மொதலியார் கிட்ட குடுத்துருவம். அது வட்டிக்கு வுட்டுப் பெரிசு பண்ணட்டும். பின்னாடி வேற வண்டி ஏதாவது ஒடைஞ்சதுன்னு அதுவும் பேசுவம்."

"ஏன் இப்படி பறக்கிற. இங்க தாண்டிடலாம். தாம்பரத்துல விடிஞ்சு போச்சுன்னு ஓவர்லோடுன்னு போலீஸ்ல மடக்கிடுவான்."

"போலீஸ்தானே. எறங்கி நான் பேசறேன். வுடு." கௌசல்யா ஓடும் லாரியில் சாய்ந்து கொண்டாள்.

"அடி செருப்பால..."

"ஏன் வெள்ளைச்சட்டை போட்ட புத்தியா...?"

"அதுக்கில்ல... ஒருநா என்னிய எறக்கி விட்டு நீ ஸ்டீரிங் புடிக்கப் போற... தண்ணித் தொட்டித் தெருவே அசந்து போய் நின்னுடப் போவுது."

"ஏன் ஒனக்கு அதுல இஷ்டமில்லியா?"

"இஷ்டமில்லாதயா பொட்டு வச்சேன்?"

"எப்படினாச்சும் எப்படினாச்சும் கஷ்டப்பட்டுப் பத்து லாரி வாங்கிடணும். என்ன சொல்ற நீ?"

"வாங்கிடலாம். கவலேய வுடு."

(தொடரும்)

# கவர்னர் பதவிகளை ஒழிக்கலாமா?



டூலா



சௌந்தரராஜன்

○ கண். தமிழ்ச்செல்வன், நெல்லிக்குப்பம்

? திருச்சி சௌந்தரராஜன் சத்துணவு மகாநாடு நடத்துவது கேள்விக்குரியதா? கேலிக்குக் குரியதா?

! கேலிக்குரியதாகி விடாமல் பார்த்துக்-கொண்டால் சரி. 'சத்துணவில் உணவு இருக்கிறது சத்தைத்தான் காணோம்' என்ற குற்றச்சாட்டு வலுத்து வருகிறது. சத்துணவைச் சாப்பிட்ட பின் குழந்தைகள் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்படும் நிகழ்ச்சிகளும் அதிகரித்து வருகின்றன. சமீபத்தில் 67 குழந்தைகள் மதுரை ராஜாஜி மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர். இதையெல்லாம் சீர்திருத்தும் நோக்கில் மகாநாட்டில் உருப்படியான யோசனை, நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்றால் மக்கள் வரிப் பணத்தில் வீண் செலவு செய்ததுதான் மிச்சமாகும்.

○ எஸ். அமிர்தா சௌந்தரராஜன், ஈரோடு

? எம். எஸ். விசுவநாதன் - ராமமூர்த்தி இணையப் போகிறார்களாமே?

! பிரிந்தவர் கூடினால் பாடவும் வேண்டுமோ என்று சொல்லி விடாதீர்கள்.

○ இரணியல் ரோஜா, தூத்துக்குடி

? கவர்னர் பதவிகள் ஒழிக்கப்பட வேண்டும் என்று காஷ்மீர் எதிர்க் கட்சிகள் மகாநாட்டில் தீர்மானம் நிறைவேறியிருப்பது பற்றி...

! கவர்னர் பதவி மிக அவசியமான ஒன்று. ஆளுனருக்கு ஜனநாயகத்தில் மிக முக்கியமான கடமைகள் உள்ளன. அந்தப் பதவியை ஒழிக்க முடியாது. கூடாது. எதற்கு எதிர்ப்பு என்றால், மத்தியில் ஆளும் கட்சி தனக்கு ஆதரவு தருகிற, தனது ஆதரவு பெற்ற ஆளாகப் பார்த்து கவர்னர் பதவி அளித்து அவரைத் தன் இஷ்டப்படி ஆட்டிவைக்கிறபோக்குக்குத்தான். ஆளுனர் மத்திய ஆட்சிக்கோ அல்லது மாநில அரசுக்கோ விசுவாசம் காட்டாமல் சுதந்திரமாகச் செயல்பட வேண்டும்.

○ பா. நாராயணன், சென்னை-40

? ஸ்ரீநகர் எதிர்க்கட்சிகள் மகாநாட்டில் பாரதீய ஜனதாவும் லோகதளமும் கலந்து கொள்ளாதது சரியா?

! ஆரம்பத்திலேயே அழைப்பு விடுக்காதது தவறு என்றாலும் அதற்காக வருத்தம் தெரிவித்தாகி விட்டது. அதன் பிறகும் இவர்கள் வரட்டு ஜம்பத்துடன் முரண்டு பிடித்தது ரசிக்கும்படியாக இல்லை. கருத்து மாறுபாடுகள் இருந்தால் அதை மாநாட்டிலேயே வெளியிட்டிருக்கலாம். அனைவரும் யோசித்து நல்ல முடிவுகளுக்கு வர உதவியிருக்கும்.

○ ஆர். சிவராஜ், லால்குடி

? பஞ்சாபில் இந்திரா காங்கிரஸ் மந்திரி சபை கலைக்கப்பட்டு ஜனாதிபதி ஆட்சி கொண்டு வந்திருப்பது நியாயம்தானா?

! இதில் இரண்டாவது கருத்துக்கே இடமில்லை. அங்கு வன்முறைகள் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தன. மாநில இ. காங்கிரஸ் அரசு அவற்றைச் சமாளிக்கும் ஆற்றல் தனக்கு இல்லை என்பதை ஒவ்வொரு நாளும் உலகுக்கு உணர்த்தி வந்தது. ஆக, ஜனாதிபதி ஆட்சி அறிவிப்பு சரியே. ஆனால் பிரச்னை தீரவில்லை. ஒரு நல்ல முடிவை நோக்கி எடுத்து வைக்கப்பட்ட முதல் அடியாக இதைக் கருத வேண்டும். பேச்சு வார்த்தைகள் தொடர வேண்டும்.

○ அன்புதாசன், கவுந்தப்பாடி

? காந்தி ஜெயந்தியை யொட்டி உங்களுக்கு நினைவுக்கு வருவது?

! வழக்கம் போல் இந்த ஆண்டும் எம்.ஜி. ஆர். காந்திஜெயந்தியை யொட்டி மது விலக்குக்காக முதலைக் கண்ணீர் வடிப்பார் என்று எதிர்பார்த்தேன். அதேபோல் அரசு நடத்திய காந்தி ஜெயந்தி விழாவில் முதல்வர் நாடகமாடி விட்டார். மது விலக்கு அவர் இதய பூர்வமாக விரும்புகிற ஒன்றும். ஆனால் ஆண்மக்கள் குடித்ததற்காகக் கைது செய்யப்படும் போது அவர்கள் மனைவிமார்கள் கஷ்டப்படுவார்களே என்பதற்காகத்தான் தயங்குகிறாராம். ஹீரோ ரோலிலிருந்து காமெடி ரோலுக்குத் தாவியிருக்கிறார். புருஷர்கள் மது அருந்துவதால் மனைவிமார்களே மிக அதிகமாகப் பாதிக்கப்படுகின்றனர் என்று முன்பு அலறியவரும் இவரே தான். ஒரு சட்டத்தை அமல்படுத்தத் திராணி இல்லை என்பது அந்தச் சட்டத்தையே வாபஸ் பெறுவதை நியாயப் படுத்திவிடாது.

○ வி. சந்திரசேகரன், வீரராக்கியம் ★

? அரசியல்வாதிகளுக்குப் பல்கலைக் கழகங்கள் போட்டி போட்டுக் கொண்டு டாக்டர் பட்டம்

வழங்குவதால் படித்து டாக்டர் பட்டம் பெறுபவர்களின் மனநிலை எப்படி இருக்கும்?

அரசியல் காரணங்களுக்காக டாக்டர் பட்டம் வழங்கப்படும் பழக்கத்தையும் அதில் நடக்கிற அசிங்கங்களையும் அலசி ஆய்வுக் கட்டுரை எழுதி ஒரு டாக்டர் பட்டமே வாங்கலாம் என்று தோன்றும்.

○ கே. ராஜகோபாலன், விருகம்பாக்கம்

? பிரதமரின் அயல்நாட்டுப் பயணம் எவ்வகைகளில் வெற்றி? எவ்வகைகளில் தோல்வி?

! பிரதமர் பின்னோடு சென்ற படை படை அதிகாரிகள் — பாதுகாப்புக்காகச் சென்ற துப்பறியும் நிபுணர்கள் — திரும்பி வரும் போது வீடியோக்களும் கேஸட் ரிகார்டர்களும் மற்றும் பல எலெக்ட்ரானிக் சாதனங்களும் உடன் கொண்டு வந்தது மாபெரும் வெற்றி. அவற்றை கஸ்டம்ஸ் அதிகாரிகள் கண்ணில் காட்டாமல் கொண்டு போய்விட முயன்றதில் பாவம், படுதோல்வி. இதையடுத்து மேலிட உத்தரவுப்படி வெளியாகியுள்ள அறிக்கை எதுவுமே தவறாக நடக்கவில்லை என்று பூசி மெழுகுவதும், அதிகாரிகள் தங்கள் பொருட்களை டியூட்டி கட்டி எடுத்துப் போக அனுமதிக்கப்பட்டிருப்பதும் பிரதமருக்கு மட்டுமென்ன, பாரதத்தின் ஸ்பெஷாலிடியான ஜனநாயக சோஷலிஸத்துக்கே மகத்தான வெற்றி!

○ வி. கோபிநாத், லெட்சுமாங்குடி.

? இந்தியாவில் மக்கள் தொகை பெருகும் வேகத்தில் தொழிலகங்கள் பெருகவில்லையே?

! மக்கள் தொகை பெருக வாய்ப்பான சூழ்நிலை இயற்கையாகவே உள்ளது. தொழிலகங்கள் பெருக வாய்ப்பான சூழலை அரசாங்கம் ஏற்படுத்தவில்லை. 81—82ல் 7.6 சதம் தொழில் உற்பத்தி அதிகரித்தது. ஆனால் 82—83ல் தொழில் உற்பத்தி 3.2 சதமே! இதை ரிஸர்வ் பாங்க் அறிக்கையே கூறுகிறது. இருக்கிற தொழிலகங்களே மின்வெட்டில் தள்ளாடும்போது புதிய தொழிலகங்கள் எப்படித் தோன்றும்? பருவ மழை பொய்த்தது என்ற வழக்கமான பல்லவியை அரசியல்வாதிகளோடு சேர்ந்து ரிஸர்வ் பாங்கும் பாடுகிறது. ஆனால் நடப்பு ஆண்டின் முதல் நாலு மாதங்களில் தொழில் உற்பத்தி 0.8 சதம்தான் அதிகரித்திருக்கிறது. இதே காலகட்டத்தில் சென்ற ஆண்டு தொழில் உற்பத்தி 4.6 சதம் உயர்ந்திருந்தது. எனவே பருவ மழை பொய்த்ததை மட்டும் காரணமாகக் கூற முடியாது. மொத்த மின் உற்பத்தியில் 40 சதமே நீர் மின் நிலையங்கள். அனல் மின் நிலையங்கள் ஆற்றலோடு செயல்படாததுதான் தொழில் உற்பத்தி பாதிப்புக்கு முக்கிய காரணம்.

○ ஷைலஜா, காவேரிப்பாக்கம்

? அடியார் கைதாகியிருக்கிறாரே?

! மது விலக்குச் சட்டத்தின் கீழ் அவர் கைதாகி இருப்பதுதான் பெரிய ஜோக். மக்கள் குடிப்பதைத் தடுக்கப் பயன்படாத மதுவிலக்குச் சட்டம் பிடிக்காதவர்களைப் பிடித்து உள்ளே தள்ளவாவது பயனுகிறதே. அந்தமட்டும் உபயோகமானதுதான்!

○ ஜம்புலிங்கம், கடலூர்

? ஜப்பானின் முன்னாள் பிரதமர் டநாகாவுக்கு லஞ்சம் வாங்கியதற்காகச் சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கப்பட்டுள்ளதே, கவனித்தீர்களா?

! கவனித்தேன். இந்தியா போல் அல்லாது அங்கு அரசனுக்கும் ஆண்டிக்கும் ஒரே மாதிரியான நீதி கிடைக்கும் என்று புரிந்து கொள்ளவும் செய்தேன்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
வி. சந்திரசேகரன்,
வீரராக்கியம்
(முழு விலாசம் தேவை)


அடியார்


விஸ்வநாதன்




## நீங்கள் கேட்டவை - தராசு



அக்டோபர் 16 முதல்

# சென்னையில் இருந்து வெளிவருகிறது

# மாலை மலர்

முற்றிலும் மாறுபட்ட மாலை தினசரி

மாலை மலர்

**MAALAI MALAR**

(Leading Evening Tamil Daily)
RANI BUILDINGS
1091, POONAMALLEE HIGH ROAD, MADRAS 600 007.

SIMULTANEOUSLY PUBLISHED FROM MADRAS, COIMBATORE, SALEM AND PONDICHERRY.



## மென் பாதங்கள்

பனிப்பாளங்களின் குளிர்ச்சியை
என்கால்கள் தாங்காது
ஆனால் அதன்முடியில் நீயிருந்தால்
உனக்காகத் துள்ளி வருவேன்.
பனிக்கதவுகள் ஒரு பொருட்டல்ல...
நடுப்பகல் சூரியக் கைகளின்
வெம்மை தாங்காது என்கால்கள்.
ஆனால் எரிமலையின் உச்சியில்
உன்வீடு கட்டப்பட்டிருந்தால்
உனக்காக அக்கினியில் நடனமாடுவேன்.
திராவகக் குழம்புகள் ஒருபொருட்டல்ல...
மென்மைப் பூக்களை மட்டுமே
தொடுவேன் நான்; என் கால்கள்
முட்களின் கூர்மையைத் தாங்காது.
ஆனால் முட்கள் என் கால்களை
முத்தமிடுவதை நீ விரும்பினால்
சாகும்வரை அதில் நடனமாடுவேன்.
முட்கள் எனக்குப் பொருட்டல்ல...
ஆனால்....
உன் கோழைத்தன்மையை என்
கால்கள் பொறுத்துக்கொள்வதேயில்லை,
மிதித்து அழிக்கவே விரும்புகின்றன.
அது இல்லாத உன்னைத்தான் நேசிக்கிறேன்
வா... உலகத்தை ஒன்றாக ரசிப்போம்.

–தாமரை
பி. ஈ. (மெகானிக்கல்) 2ம் ஆண்டு
கோவை அரசினர் பொறியியற் கல்லூரி







## ஒரே ஒரு நிமிடம்

'ஒரே ஒரு நிமிடம்; இதோ வந்துவிட்டேன்' என்று காத்திருக்கும் கணவனிடம் மனைவி கூறுவதைக் கேட்டிருக்கிறோம். ஆனால் இந்த ஒரு நிமிடத்தில் எத்தனை காரியங்கள் நடைபெறுகின்றன தெரியுமா?

6000 விண்கற்கள் பூமியை நோக்கிப் பாய்கின்றன. பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்வதில் 950மைல் தூரம் கடந்திருக்கும். சுமார் 38 புயல்கள் உருவாகியிருக்கும். 1400 கன அடி மழை உலகின் பல பாகங்களில் பெய்திருக்கும். நதிகள் அந்த ஒரு நிமிடத்தில் 35000 டன் தண்ணீரைக்கடலில் கொண்டு போய்ச் சேர்த்திருக்கும்.

உலகத்தில் 100 பேர் மாண்டிருப்பார்கள். 14 குழந்தைகள் பிறந்திருக்கும். 34 திருமணங்கள் நடைபெற்றிருக்கும். நான்கு தம்பதிகள் விவாகரத்து செய்து கொண்டிருப்பார்கள். ஒரு நிமிடத்தில்உலகம் முழுவதிலும் மூன்று லட்சம் டெலிபோன் அழைப்புகள் கேட்டிருக்கும். 63 லட்சம் சிகரெட்டுகள் புகைக்கப்பட்டிருக்கும். 64000 காலன் மது மனிதரால் குடிக்கப்பட்டிருக்கும். 400 டன் உணவுப் பொருட்கள் உண்ணப்பட்டிருக்கும். 300 டன் நிலக்கரி, 700 டன் இரும்பு வெட்டி எடுக்கப்பட்டிருக்கும்!

வல்லை எஸ். சுடலைமுத்து,
இளங்கலை இளம்நிலையம்,
இரண்டாம் ஆண்டு வேதியம்,
தூய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.

## 'த்ரில் வாங்கலையோ த்ரில்!'

மரத்தடி மைந்தர்கள் புகை மண்டலத்துக்கு மத்தியில் மந்திராலோசனை நடத்திக்கொண்டிருந்தார்கள். நடுநாயகமாகத் 'த்ரில்லிங்ராஜா!' இவன் 'த்ரில்லிங்' என்ற பெயரில் உதவாக்கரைக் காரியங்களை யெல்லாம் செய்து கொண்டிருப்பான். எதிலேயும் ஒரு த்ரில் வேணும்டா என்பான். போன மாதம் எகனாமிக்ஸ் ஜோதியிடம், "நான் கமலஹாஸனோட அண்ணன் மகன்" என்று புளுகப் போக அவளும் அதைச் சத்திய வாக்காக நினைத்து இவனை லவ் பண்ணினாள். கல்யாணத்துக்கு அப்புறமாவது 'சினிமாவில் நடிக்கச் சான்ஸ் கிடைக்காதா' என கற்பனை பண்ணிக் கொண்டு இருக்கிறாள்.

"ஏண்டா அவகிட்டப்போய் சொன்னே?" என்றால், "எல்லாம் ஒரு த்ரில்லுக்குத் தான்" என்பான்.



''இப்ப என்னடா பண்ணனும் உங்களுக்கு'' —ராஜா கேட்டான்.

''த்ரில்லிங்கா ஏதாவது...''

''விடுங்கடா. சாயங்காலம் ரயில்வே ஸ்டேஷனில் பாருங்கள்.''

மாணவக் கண்மணிகள் குளுகோஸ் சாப்பிடாமலேயே உற்சாகமடைந்தார்கள்.

மாலை.

ரயில்வே ஸ்டேஷன்.

டி. டி. ஆர். வத்தலக்குண்டு வாகதேவன் வேக வேகமாக வந்து கொண்டிருந்தார். ராஜாவைப் பார்த்ததுமே அவருக்குப்புரிந்து போயிற்று. மாணவக் கும்பலுக்கு நடுவே ஒருத்தன் மட்டும் ஆடு திருடிய கள்வன் போலத் திருதிருவென்று முழித்துக் கொண்டு...

வெற்றிப் புன்னகையுடன் அந்தக் கும்பலை உற்றுக் கவனித்தார்.

''டே ராஜா, தொலைஞ்சேடா'' என்று கத்தினான் சொக்கு.

''ச்சு, சும்மா இருடா. இவனே காட்டிக் கொடுத்திடுவான் போலிருக்கு'' அதட்டினான் ராஜா.

முன்னாலிருந்தவர்களிடம் செக்கிங்கை முடித்துவிட்டு டி. டி. ஆர். உற்சாகத்துடன் அவர்களை நோக்கி வர, ''டேய் ராஜா எங்கேடா ஓடறே'' என்று அவன் நண்பர்களான வருங்கால இந்நாட்டு மன்னர்கள் அலற, கண் இமைக்கும் நேரத்தில் அடுத்த பெட்டியில் இருந்தான் ராஜா.

சோர்ந்துவிடுவாரா டி.டி.ஆர்.? அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்ற கணப்பொழுதில் பக்கத்துக் கம்பார்ட்மெண்டில் இருந்தார். விழிகளால் அவர் துழாவிக்கொண்டிருக்க, அந்தச் சமயம் பார்த்து ராஜா பாத்ரூம் கதவைத் திறந்து கழுத்தை வெளியில் நீட்ட, கோழியை அமுக்குவது போல் ஒரே அமுக்கு. ''டிக்கட் இருக்காப்பா?''

''இல்லை சார்'' என்றான் அமைதியாக ராஜா.

''அப்ப இறங்கி நட ஸ்டேஷனுக்கு'' என்றார் விறைப்பாக.

கெஞ்சினான். நண்பர்களும் கேட்டுக் கொண்டார்கள்:

''சார், இந்த ஒரு தடவை விட்டுடுங்க சார், ப்ளீஸ்!''

''நத்திங் டூயிங்.''

பூலான் தேவியையே தனியொருவனாகக் கைது செய்தவரைப் போல் வெற்றி மிதப்பில் முன் நடந்தார் டி.டி.ஆர். வத்தலக்குண்டு வாகதேவன். இந்தப் பத்தொன்பது வருட சர்வீஸில் ஏதோ இப்பொழுதுதான் பூடான் லாட்டரியில் பத்து லட்சம் விழுந்ததைப் போல இவன் கிடைத்திருக்கிறான். இவனையா விடுவது? முடியாத காரியம்! என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டார்.

போலீஸ் ஸ்டேஷன்.

''ஏம்பா டிக்கெட்டில்லாமல் வந்தாயாமே?'' —இன்ஸ்பெக்டர் சுந்தர்ராஜ்.

''ஆமா சார்'' அமைதியாகச் சொன்னான் ராஜா.

''நீங்கள்ளாம் படிக்கிற பசங்கதானே''—கோபமாகக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

''அப்படித்தான் ஊருக்குள்ளே பேசிக்கிறாங்க''-கிண்டலாகச் சொன்னான் சொக்கு.

''ஷட்டப். டிக்கெட்டில்லாமல் வந்துட்டுக் கிண்டல் வேறயா''—இன்ஸ்பெக்டர் சுந்தர்ராஜ்.

''அதானே, நன்னாக் கேளுங்க சார்'' என்றார் டி.டி.ஆர்.

கத்தினார் இன்ஸ்பெக்டர்: ''பைன் கட்டப் பணம் வெச்சிருக்கியா?''

''இல்லை சார்.''

''பின்னை என்னதான் வச்சிருக்கே?'' என்று இன்ஸ்பெக்டர் கேலியாகக் கேட்க,

''ரயில் பாஸ்'' என்றான் ராஜா மிக மிக அமைதியாக.

மயங்கி விழுந்த . வத்தலக்குண்டுவைக் கைத்தாங்கலாகப் பிடித்தான் சொக்கு.

—தெ. செந்தில்நாதன்,
இளம் வணிக இயல், இரண்டாம் ஆண்டு,
பி. பி. எம். கலைக் கல்லூரி,
கோவை புதூர், கோவை.



அடுத்த இதழில்

வையவன் எழுதும்

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

# ராகங்கள் மாறுவதில்லை



நிறையப் பணமும், கேள்வி கேட்க ஆளில்லாமலும், இளமையும் இருந்துவிட்டால் என்ன செய்யத் தோன்றும்? ஊரிலிருக்கிற பெண்களுடன், திரும்பிப் பார் சிவாஜி மாதிரி, இருவர் உள்ளம் சிவாஜி மாதிரி• கொட்டம் அடிக்கத் தோன்றும். இதுதான் பிரபு.

விதவை அம்மா மட்டுமே துணையிருக்கிற இளம் பெண்ணுக்கு எது அதிகமாயிருக்கும்? ஜாக்கிரதை உணர்வு. இது அம்பிகா.

இவர்கள் சந்தித்துக் கொண்டால் என்ன ஆகும்? மோதலில் ஆரம்பித்து காதலில்... வெயிட்... இந்தப் படத்தில் அது மோதலிலேயே நிற்கிறது. அம்பிகாவை வழிக்குக் கொண்டுவர கடையில் ஒரு நாடகம் ஆடி அவரைக் கடத்திச் சென்று, தனிமையான பங்களாவில் பிரபு 'செய்யக் கூடாததை'ச் செய்கிறார்.

நியாயமாய் நமக்கே கோபம் வருகிறது. நிர்ப்பந்தக் கல்யாணத்துக்கப்புறமும் அம்பிகாவின் கோபம் தொடர்கிறது. கூடப் படுக்காத மனைவியை வழிக்குக் கொண்டு வர பிரபு என்னவெல்லாம் இழக்க வேண்டி வருகிறது என்பது கதையின் மூல முடிச்சு. (மு. முடிச்சிலும் இதே முடிச்சு இல்லையோ?)

ஒய். ஜி. எம். - வனிதா காமெடி அசட்டுப் பிசுக்குத்தனமாய் ஒட்டாமலேயே போகிறது.

'அய்யா, உங்க நடை, உடை, குரல் எல்லாத்திலேயும் அப்படியே அப்பாவைக்கொண்டிருக்கீங்க' — பிரபுவைப் பார்த்துப் படத்தில் பேசப்படும் வசனம். அவர் நடிப்பிற்கும் அதுவே விமர்சனம்.

குழந்தைக்காக எவ்வளவோ ஏங்கினாலும் கணவன் கட்டாயப்படுத்திக் கொடுக்கிற குழந்தை வேண்டாமெனக் குமுறுகிற வித்தியாசமான பாத்திரம் அம்பிகாவுக்கு. கடைசி வரை நிதானம் தவறாத அநாயாசம்.

இளையராஜாவின் இசை படத்திற்கு அருமையான பக்க பலம்.

பாடல் காட்சிகளைப் படமாக்குவதில் சிறுமுகை ரவி சிரத்தை காட்டி மனத்தைக் கவர்கிறார்.

என்ன இருந்து என்ன? கதை என்னவோ வழக்கமான ராகங்கள்தான்!

மரணத்துக்குப் பயப்படும் ஒரு இளைஞன் திருமணநாளன்று கணவனை இதயநோய்க்குப் பலிகொடுத்த ஒரு கன்னி விதவையின் மேல் மையல் கொண்டு, 'இணைந்து' அப்புறம் அவள் ராசி சரியில்லாததால்தான் அவன் முதல் கணவன் இறந்தான் என்ற வீண் மூட நம்பிக்கையில் அவளைப் பிரிய முடிவு செய்து, அப்புறம் அவள் ராசியானவளே என்று மாற்றார் கூற்றுப்படி கற்றுத் தெளிந்து மறுபடியும் அவளையே நாடிப் போய் அடைய முயன்று, அவள் விலகுவதில் தோற்றுப் போகிற ஒரு காதல் கதை. (அப்பாடா, மூச்சு விடலாம்)

கதாநாயகன் பிரேம். அவ்வப்போது காட்டுகிற விளக்கெண்ணெய் குடித்த முக பாவத்தையும், பேச்சில் நெருடுகிற மழலையையும் தவிர்த்திருந்தால் (குரல் சொந்தமா, இரவலா?) நன்றாக இருந்திருக்கும். செல வழிக்க வெள்ளையப்பன் இருந்துவிட்டால் போதும். யார் வேண்டுமானாலும் நடிக்கலாமே — (இருந்தாலும் சண்டைக் காட்சிகளில் சுறுசுறுப்புக் கொஞ்சம் அதிகம்தான்—காமிரா வேகமாக ஓடுவதாலோ?)

முழுக்க முழுக்க 'டேஞ்சர்' சிவப்பில் உடுத்துக்கொண்டு சாலே ஸ்கூல் என்று அலைகிற இடம் கலகலப்புக்கு ஒரு கட்டம்.

பூர்ணிமா ஜெயராம் நிறைவாய்ச் செய்திருக்கிறார்.

தொழிற்சாலை முதலாளி ஜெயசங்கருக்கு அளிக்கப்பட்டிருப்பது ஐ. எஸ். . ஐ. மார்க் குத்தப்பட்ட கண்ணியமான வேடம். பின் பாதியில் வந்தாலும் இன்னும் காரம் குறையவில்லை என்று நிரூபிக்கிறார். கதாநாயகிக்குத் தோழியாய் ரஜனி. அசப்பில் பார்த்தால் இன்னொரு பூர்ணிமா ஜெயராம். அந்த அளவான மூக்குதான் பூர்ணிமா ஜெயராமிடமிருந்து வித்தியாசப்படுத்தி யிருக்கிறது. ஏன் இவர் அவ்வளவாய்த் தட்டுப்படுவதில்லை. ராசியில்லையோ இவருக்கும்?

ஒய். ஜி. மகேந்திரன், தே. சீனிவாசன், ஒரு விரல் கிருஷ்ணா ராவ் ஆகியோரையும் லிஸ்டில் சேர்ப்பதைத் தவிர விசேஷமாய் எதுவுமில்லை.

வழக்கம்போல் டம, டம, டமால் என்றில்லாமல் இரண்டு பாடல்களுக்குப் பழுதில்லாமல் இசையமைத்திருப்பவர்கள்— சங்கர், கணேஷ்.

கதை கட்டுகையில் அஸ்திவாரத்திலேயே கோளாறு. அதனால் பெங்களூர்க் கட்டிடம் மாதிரி 'இப்ப விழவா' 'இப்ப விழவா' என்று படம் நெடுகக் கேள்வியை அது கேட்டுக் கொண்டே யிருக்கிறது.

—ஜெயமன்மதன்






# இயற்கை வைத்தியம்

**சென்னை காதி இராமோத்யோக் பவனில் ஓர் இயற்கை மருத்துவ முகாம் நடந்தது. அங்கு சென்றபோது கிடைத்த சில தகவல்கள்.**

- காலையில் காப்பி, டீ குடிப்பதற்குப் பதிலாக அருகம்புல் ஜூஸ், பூசணிக்காய் ஜூஸ், வாழைத்தண்டு ஜூஸ் இவை குடிக்கலாம் (செய்முறை: அருகம்புல், பூசணித் துண்டு அல்லது வாழைத் தண்டு துண்டுகள் இவற்றை அரைத்துச் சாறு எடுத்துத் தண்ணீர் கலந்தால் ஜூஸ் ரெடி) காப்பி, டீயை நிறுத்தினாலே 20 சதவிகித நோய்கள் வராது.
- மலச் சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை, உடல் சூடு இவற்றுக்கெல்லாம் முற்றுப் புள்ளி வைக்கப் போதுமான அளவு தண்ணீர் குடிப்பதுதான் வழி. குறைந்தபட்சம் ஒரு நாளைக்கு எட்டு டம்ளர் தண்ணீர் நாம் குடிக்க வேண்டும். சாப்பிட்ட ஒரு மணி முன்பும், சாப்பிட்ட ஒரு மணி கழித்தும், தூங்கப் போகும் முன்பும், தூங்கி எழுந்த உடனும் தண்ணீர் குடிக்க வேண்டும். நல்ல பசி எடுக்கும்போது தண்ணீர் குடிக்கக் கூடாது.
- வாரம் ஒரு முறை உண்ணா நோன்பு இருப்பது நல்லது. உண்ணா நோன்பை முடித்ததும் உடனே அதிக அளவில் சாப்பிடக் கூடாது. உண்ணா நோன்பின் போது நீர் கூட அருந்தாமல் இருக்கலாம். அல்லது தேவையானால் நீர் மட்டுமோ அல்லது மோர், பழ ரசங்கள் அருந்தலாம்.
- சிலர் உடம்பில் குளோரோஃபில் குறைவதால் தேமல் முதலிய நோய் ஏற்படலாம். இதற்கு வாழை இலைகளைப் பரப்பி குறைந்த உடைகளுடன் அதன் மேல் படுக்கவைத்து மேலும் பக்கவாட்டிலும் வாழை இலைகளை வைத்துக் காற்றுப் புகாமல் (மூக்குத் துவாரம் மட்டும்தான் திறந்திருக்கும்.) 20 நிமிடம் சூரிய வெளிச்சத்தில் படுக்க வைக்கிறார்கள். சூரிய ஒளிக் கதிர்கள் இலைகள் வழியே உடலுக்குள் செல்லுகிறது. இலைகளை எடுத்த பிறகு உடலிலிருந்து எக்கச்சக்கமான நீர் வெளியேறுகிறது. இதனால் நம் உடலிலுள்ள கெட்ட நீர் வெளியேற்றப்பட்டு உடல் தூய்மை அடைகிறது.
- தலைவலி, தலைக் கனம், ஜுரத்திலிருந்து நிவாரணம் பெற என்ன வழி? நாற்காலியில் அமர்ந்து, பாதங்களை சுடுநீர் நிறைந்த வாளியில் வைத்துக் கொண்டு வாளியுடன் சேர்த்து உடலைக் கம்பளியால் மூடிக் கொள்ள வேண்டும். சுமார் 25 நிமிடங்கள் கழித்துக் குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும்.
- காலை வெயிலில் உள்ளுடைகளுடன் உடலின் முன் பகுதியிலும், பின் பகுதியிலும் நன்கு வெய்யில் படும்படி நாற்காலி அல்லது ஸ்டூலில் அமர்ந்து சூரியக் குளியல் எடுக்கலாம். தலையில் வெய்யில் படாமல் வெள்ளைத் துணி போட்டுக்கொள்வது நல்லது. 5 நிமிடத்தில் ஆரம்பித்து நேரத்தை அதிகபட்சம் ஒரு மணி நேரம் வரை அதிகரிக்கலாம். காலை வெயில் (9 மணிக்குள்)தான் இதற்கு ஏற்றது.
- முதுகு குளி (ஸ்பைனல் பாத்) என்றொரு சிகிச்சை. ஆழமற்ற தொட்டியில் சுடுநீர் விட்டு முதுகு மட்டும் நன்கு படும்படி படுத்து இருப்பது. இதனால் முதுகுத் தண்டு வலிமை பெறும். முதுகு வலி, நரம்பு சம்பந்தமான நோய்கள் வராது.
- இருளில் அகல் விளக்குக்குச் சில அடி தூரத்தில் சப்பணமிட்டு அமர்ந்து அவ்விளக்கின் மெல்லிய இனிய சிறு சுடரை இமைக்காது கூர்ந்து நோக்கவும். மனத் துன்பங்கள், கிளர்ச்சிகள், யாவும் நீங்கி மனம் சாந்தியடையும்.

-கலாமூர்த்தி







Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

